*Teṉṟal*
*Malar 2, itaḻ 40*
*March 20, 1956*

Record no. 947

# தென்றல்

ஆசிரியர்: கண்ணதாசன்.

உள்நாடு (இலங்கை உட்பட) விலை இரண்டணு | வெளிநாடு மூன்றணு | அலுவலகம்: 'தென்றல்' [illegible]

மலர் 2 | சென்னை | 20—3—56 | செவ்வாய்க்கிழமை | இதழ் [illegible]


# ஒடிந்த தூணும் உடைந்த அம்பியும்

# பெரியாரும் காமராசரும்!

மகத்தான ஒரு சாதனையைச் சரித்திரத்தில் வரைந்துவிட்டுத் தலைநிமிர்ந்து நிற்கிறது சர்வகட்சிக் கூட்டணி. அதிலே நல்லதொரு இடம் வகிக்கிறது திராவிட முன்னேற்றக்கழகம். கூட்டணியைப் பிளக்கவும், முறிக்கவும், பேதங்களை உண்டு பண்ணவும், "பச்சைத் தமிழன்" எனும் "சாத்துபடிப் பெய"ரை மட்டுமே மூலதனமாகக் கொண்டியங்கும் காமராசர் முதல் தன்னந் தனியாய், நிரந்தரத் தலைவராய், தானே தனக்குத் துணையாய்க் கட்சி நடத்தும் பெரியார் ராமசாமி வரை பல பேரும் முயன்ருர்கள்; முயல்கிருர்கள்.

உலகப் பாட்டாளிகளை ஒன்றுபடுத்தும் கம்யூனிஸ்டுக் கட்சி, ஆந்திர, கன்னட, கேரள தனி நாடுகளோடு தமிழகமும் சேர்ந்து திராவிடக் கூட்டாட்சி ஏற்படுத்தவேண்டும் எனப் பாடுபடும் திராவிட முன்னேற்றக் கழகம், இந்திய உபகண்டத்தின் ஒரு பகுதியாகத் தனித் தமிழ் நாடு வாழவேண்டும் எனப் பாடுபடும் தமிழரசுக் கழகம், சோஷலிசப் பாதையையே குறிக்கோளாகக் கொண்ட சோஷலிஸ்ட் கட்சி, பிரஜா-சோஷலிஸ்ட் கட்சி, தாழ்த்தப்பட்டோர் சம்மேளனம் எனப் பல்வேறு அடிப்படை முரண்பாடுகளைக் கொண்டு இயங்கும் பலவகை அரசியல் நிறுவனங்கள், குறிப்பிட்ட ஒரு கொள்கையில் ஒத்த உடன்பாடு கொண்டு, இந்தக் கூட்டணியை அமைத்திருக்கின்றன. தங்களுக்குள்ளே அடிப்படை முரண்பாடு உண்டு என்பதை இவர்களில் யாரும் மறுக்கவில்லை. இந்த முரண்பாட்டைக் காட்டி, "தேவிகுளம்-பீர்மேடு. தட்சிணப் பிரதேசம்" எனப்படும் இரண்டு பிரச்சனைகளில் மட்டும் ஒன்றுபட்டிருக்கும் ஒரு கூட்டணியைப் பிளந்து விடலாமென்று கருதுபவர்கள், அழுத்தமாகச் சொல்வதானல், அரசியல் கோமாளிகள். கண்ணப்பனுக்கும் கருணப்பனுக்கும் பகை என்ருலும் ஒரு கல்யாண வீட்டுக்கு இரண்டு பேரும் போவதும், போன இடத்திலே சந்தித்து வணக்கம் தெரிவித்துக் கொள்வதும், தங்கள் தங்கள் பரிசுகளை மணமக்களுக்கு வழங்குவதும், அருகில் உட்கார்ந்து சாப்பிடுவதும், அளவளாவுவதும், அந்தப் பகைக்கு அப்பாற்பட்ட மனித நாகரிகமாகும். கருமாதி வீட்டிலும் இதே கதைதான். "உனக்கும் அவனுக்கும் பகையாயிற்றே; இரண்டு பேரும் ஏன் ஒன்ருக ஒரே வீட்டில் இழவு விசாரிக்கப் போகிறீர்கள்?" என்று யாராவது கேட்டால், அவர்களது தலையைத் திறந்து மூளை இருக்கிறதா என்று பார்ப்பதைத் தவிர வேறு வழி இல்லை. சாதாரண அறிவு படைத்தவர்கள் கூட அதுமாதிரிக் கேள்விகளைக் கேட்க மாட்டார்கள். ஆனல், கேட்கிருர் காமராசர்! அவருக்குச் சாதாரண அறிவு கூட இல்லை என்ற உண்மையை மக்கள் மன்றம் நன்ருக அறிந்திருந்தும் அதை வெளிப்படுத்திக்கொள்வதிலே, சமீபகாலமாக ஆர்வம் காட்டி வருகிருர்.

**கண்ணதாசன்**

கூட்டணி நடத்திய 'ஹர்த்தா'லை, "தமிழ் நாட்டை இந்தியாவிலிருந்து பிரிக்க விரும்புவோரின் போராட்டம்" எனப் பண்டித நேரு வர்ணித்தார். தூரத்திலிருந்து பார்க்கும் அந்தத் துரைமகனுக்கு உள்ளது உள்ளபடியே தெரிய நியாயமில்லை என்ருலும் அருகிலிருந்து பார்க்கும் இந்தக் கரிய திருமேனியும் உண்மையை அறியாமல் இருக்க நியாயம் இல்லை. அறிந்திருந்தும், வழக்கம்போல் பண்டிதருக்குப் பின்னல் [illegible] சொல்லியே [illegible] சொல்லாக்கி எழுத்துப் பிசகாமல் அள்ளி இறைக்கிருர்.

கண் குருடு; காது செவிடு; கால் நொண்டி; கை இல்லை என்ருலும் மேனியிலே பட்டதை என்ன என்று உணர்ச்சியாலே கண்டு சொல்லுகிறவர்கள் பலர் இருக்கிருர்கள் உலகிலே. அத்தனை அவயவங்களும் சரியாக இருந்தும் அந்த உணர்ச்சி கூட இல்லை காமராசருக்கு! ஒவ்வொரு கட்சிக்கும் குறிக்கோள் என்ன என்பதை--படித்தல்ல--கேட்டாவது தெரிந்து வைத்திருப்பார் காமராசர். அவ்விணைப்பின் நோக்கம் யாதென்பதும் தெளிவாக வரையறுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. காமராசரின் செயலாளர் இதைக் காதுவழி ஏற்றியிருப்பார். இருந்தும் 'கூட்டணியின் லட்சியமே இந்தியாவிலிருந்து பிரிவது தான்" என்று ஒரேயடியாக அடிக்கிருர். "இதை வெளிப்படையாகச் சொல்ல வெட்கமேன்?" என்று வினாவுகிருர். குறிக்கோள் அதுவாக இருந்தால்தானே வெளிப்படையாகவோ, உட்படையாகவோ சொல்வதற்கு! கூட்டணியின் இலட்சியம் "தேவிகுளம்-பீர்மேடு தமிழருக்கு ஆகவேண்டும். தட்சிணப் பிரதேசம் கூடாது" என்பதுதான். ஆனல், அந்தக் கூட்டணியில் இருக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு, இந்தியாவிலிருந்து தென்னுடு பிரிந்தாக வேண்டும் என்ற கண்டிப்பான கொள்கைதான் அடிப்படைக் கொள்கை. இதைச் சொல்லக் கழகம் ஏன் வெட்கப்படப் போகிறது! சொல்லிக்கொண்டேதான் பிறந்தது! அரசியலிலே, பங்கேடு செய்து, கொள்கை வரம்பைக் கண்டுபிடித்து, போகும் பாதை போய்ச் சேரும் இடத்தையும், புதிய பாதை போடப்படும் காரணத்தையும் ஆராய்ந்தறிந்து அல்லது கேட்டுத் தெரிந்து, யார் யார் [illegible]

## தி. மு. க. திடல்

10-3-56 அன்று தி. மு. கழகம் தனது வரலாற்றில் மற்ருெரு இன்ப நிகழ்ச்சியை இணைத்துக்கொண்டு விட்டது. இனஎழுச்சி கொண்ட திராவிட மக்கள், தாயகத்தின் நலன் கருதிப் பணியாற்றும் தி. மு. கழகத்திற்கு அளித்து வரும் ஆதரவின் சின்னமாக — வெற்றிவிருதாக சென்னை நுங்கம் பாக்கத்தில் கழகத்திற்கென வாங்கப்பட்டிருக்கும் சொந்த மைதானத்தில் (தி மு க. திடல்) ஓர் மாபெரும் பொதுக்கூட்டம் 10-3-56 சனி மாலை நடைபெற்றது. கழகத்தின் தலைமைக் கழகம் ஏற்று நடத்திய இந்தக் கூட்டம் மிகச் சிறப்பான முறையில் நடத்தப்பட்டது. பல்லாயிரக்கணக்கான மக்கள் கலந்துகொண்டார்கள்.

அறிஞர் அண்ணு, பொதுச்செயலாளர் நெடுஞ்செழியன், துணைப் பொதுச்செயலாளர் நடராசன், மதியழகன், கலைஞர் கருணாநிதி, கண்ணதாசன், சி. பி. சிற்றரசு, காஞ்சி-கல்யாண சுந்தரம், தோழியர் சத்தியவாணிமுத்து, ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ., நடிப்பிசைப் புலவர் கே. ஆர். ராமசாமி, அலமேலு அப்பாதுரை ஆகியோர் சொற்பொழிவாற்றினர்கள்.



# கூகைக் குரலுக்கா? கொக்கரக்கோ கோழிக்கா?

## மூங்கையன் பேசலுற்றான்! என்னதான் மொழியலுற்றான்?

## கடல்வற்றிக் கருவாடு தின்னக் கரிய திருமேனி ஆசை!

எல்லோரும் எதற்காகப் போகிறார்கள் என்பதையும் உணர்ந்து, அதன்மீது தன் கருத்தைத் தெளிவாகவும் குறைபாடு காணமுடியாத அளவிலும் சொல்வதுதான் ஒழுங்கான—அறிவுள்ள-அரசியல்வாதிகளின் செயலாகும். "மொட்டைத் தாதன் குட்டையிலே விழுந்தான்" என்று கதை சொன்னால், "இந்தக் கட்டையிலே போவானுக்கு அதைப்பற்றி என்ன கவலை" என்றுதான் ஊர் கேட்கும். ஆகவே, கூட்டணியில் இருக்கும் முன்னேற்றக் கழகத்திற்குப் பிரிவினை லட்சியம் உண்டே தவிர, கூட்டணியின் லட்சியம் அது அல்ல; அல்ல; அல்ல; ஒன்று!

அடுத்து, பிரிந்து போகும் கொள்கைக்கு மக்களிடத்திலே ஆதரவு இல்லாதது போலவும் அதனாலேயே நாம் அதை வெளிப்படையாகச் சொல்ல வெட்கப்படுவது போலவும், "இந்தத் துணிச்சல்கூட இல்லாதவர்கள் என்ன சாதிக்கப் போகிறீர்கள்" என்றும், இந்த 'ஆனைமுகன் தம்பி ஆறுமுகன்' சக்கைப்போடு போடுகிறார். இதுவரையிலே காமராசர் எந்தப் பள்ளியறையிலே சயனம் கொண்டிருந்தாரோ, நாமறியோம்! இதிலிருந்து, காமராசருக்கு அரசியல் அறிவு துளிக் கூட இல்லை என்றும், ஒன்றும் தெரியாததால்தான் பலநாட்களாக 'மௌனமாக இருக்கிறார்' என்றும், அதனால்தான் சட்டசபையில் இவர் வெட்டிப்போட்ட மரம் மாதிரிக் கிடந்துகொண்டு சுப்ரமணியத்தையே பதில் சொல்ல வைக்கிறார் என்றும் பொதுமக்கள் முடிவுகட்டிக் கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

காமராசர் விளையாடிக்கொண்டிருக்கும் காங்கிரஸ் கட்சிக்கு-ஏக இந்தியாக் கட்சிக்கு நாட்டிலே இருக்கிற பலத்தைக் காட்டிலும், பிரிவினைக் கழகத்துக்கிருக்கிற பலம் நிச்சயமாகப் பத்து மடங்கு அதிகம். காமராசர் போன்ற 'அசமந்த'ங்கள், ஒருமுறை தமிழ்நாடு முழுக்கச் சுற்றிவர வேண்டும். தி. மு. கழகத்தின் பலம் அப்போது புரியும். அதன்றியும் துணிச்சலில் இவர் சூராதி சூரர் போலவும், நெப்போலியனுக்கே நேரடியாகப் பிறந்தவர்போலவும், "இந்தத் துணிச்சல்கூட இல்லையே" என்று காரண, காரியமில்லாமல் கேட்டு வைக்கிறார்.

துணிச்சல்!-திராவிட முன்னேற்றக் கழகத்தின் சொத்து. காமராசர் 'ஏன் இல்லை' என்று கேட்கிற அளவுக்கு அது குறைந்திருக்கவில்லை. ஒரு பொய்யைச் சொல்லி, அதிலிருந்து தீவிரமான கேள்விகளைக் கேட்டுவிட்டுத் தலைநிமிர்ந்து பார்ப்பது, தங்களைக் கெட்டிக்காரர்கள் என்று கருதிக் கொண்டிருக்கும் பைத்தியக்காரர்களின் செயலாகும். இரண்டு!

அடுத்து, தேர்தலில் கலந்து கொள்ளத்தான் இந்தக் கூட்டணியாம்! அதைச் சொல்லிவிட்டால், "காங்கிரசைக் காட்டிலும் நீங்கள் என்ன சாதித்துவிடுவீர்கள்" என்று பொதுமக்கள் கேட்டுவிடுவார்களாம்! எந்தப் பொதுமக்கள்? காமராசரின் கூட்டத்திற்கு வருகிறார்களே, 'பத்து வயதுக்குட்பட்ட' பொதுமக்கள்; அவர்கள்! ஏதோ பொதுமக்களெல்லாம் இந்த வெண்டைக்காய் வீரரையே நம்பி இருப்பதுபோலவும் இவர் கையை நீட்டினால் அண்ட சராசரமெல்லாம் 'வெல வெல'வென்று நடுங்கிப் 'பொல பொல'வென்று உதிர்ந்துவிடுவது போலவும் நினைப்பு. காமராசருக்கு ஒன்று சொல்ல விரும்புகிறோம்; பொதுமக்கள் என்பது காங்கிரஸ்காரர்களோ, பெரியார் ராமசாமியோ அல்ல. பெரியார் ராமசாமியிடம் பொதுமக்களும் இல்லை. இவர்களைத் தவிர மற்ற எல்லோரும் கூட்டணியில் இருக்கிறார்கள். தேர்தல் எண்ணந்தானென்று வெளிப்படையாகச் சொன்னால் காமராசர் சொன்ன கேள்வியை யார் கேட்பார்கள்? அல்லது அப்படித்தான் இதுவரை காங்கிரஸ் என்ன சாதித்துக் கிழித்துவிட்டது! வலியில்லாமல் சுதந்தரம் வாங்கி, ஆண்டுகள் பத்துக் கடந்தும், சாண் ஏறினால் முழம் வழுக்குகிறது; "நான் ஏறட்டுமா, நீ தாங்குகிறாயா?" என்று வெளிநாடுகளிடம் யாசகம் கேட்கும் நிலையில் நாடு இருக்கிறது. வெள்ளைக்காரன் பூட்டித் தந்த நிர்வாக யந்திரம், அதை நடத்துவதற்கு வெள்ளைக்காரன் பழக்கித் தந்த ஆட்கள், அதில் ஊற்றுவதற்கு வெள்ளைக்காரன் செய்து தந்த எண்ணெய், இவற்றை வைத்துக்கொண்டு யந்திரத்தைச் சுற்றி ரோந்து வரும் மந்திரிப் பொம்மைகள், யந்திரத்தில் என்ன பழுது வந்தாலும் என்ன செய்வது எப்படிச் செய்வது என்று புரியாமல் வெளி நாடுகளிலிருந்து தேர்ந்தவர்களை வரவழைக்கும் விசித்திரம்,-அதிலும் 'நாளுக்கு நாளதிகம் நகர்ந்ததடி அம்மானை'! கடந்துபோன ஆண்டுகள் பத்து! மானம் முதல் சொரணைவரை எதுவுமே இல்லாமல் காங்கிரசின் சாதனைகளை விளம்பரப் படுத்துகிறார் ஆனா ஆவன்னாக் காமராசர்!

'கூட்டணியில் இல்லாத பொதுமக்கள்' என்ற ஒரு தொகுதி இருந்து, அப்படியே கூட்டணி தேர்தலுக்கு வருமானால், அதைப் பார்த்து அவர்கள் கேட்கக் கூடிய கேள்வி, "காங்கிரசைவிட நீங்கள் என்ன சாதித்துவிடப் போகிறீர்கள்?" என்பதாக இருக்காது. "காங்கிரஸ்தான் எங்களைக் கழுதையாக்கி வைத்திருக்கிறது; நீங்களாவது ஈடேற்றமாட்டீர்களா?" என்பதாகத் தான் இருக்கும். காங்கிரசைப் பற்றிப் பொதுமக்கள் மனதில் அவ்வளவு இருக்கிறது! ஒரு தகுதியுமில்லாது ஊர் சுற்றும் கும்பல் என்று மந்திரிகளை விவசாயிகள் வர்ணிக்கிறார்கள்! ஆகவே, காமராசர் லயோலாக் கல்லூரியில் கனவு கண்டதுபோல, நாடும் இல்லை; கூட்டணியும் இல்லை; பொதுமக்களும் இல்லை.

அவர் தங்கியிருக்கும் நிழல் தனிமரம்—பெரியார் ராமசாமி. அந்த மரத்துக்கும் பசுமை இழந்துபோன பருவம். நாட்டு மக்களிடம் மதிப்புக் குறைந்து வரும் நேரம். தன் வாயாலே தன்னைக் கெடுத்துக்கொள்ளும் காலம். ஆத்திரத்தை மட்டுமே கொள்கையாகக் கடைப்பிடிக்கும் அவசியம் வந்துவிட்ட சமயம். ஆகவே, அவரைக் கொண்டு முன்னேற்றக் கழகத்தை அழித்துவிடலாம் அல்லது கூட்டணியைப் பிளந்து விடலாம் என்று கருதுவது வாழை நாரினால் யானையைக் கட்டிவிடலாம் என்று கருதுவது போலாகும்.

திட்டத் திட்டத் திடம் ஏறும் நெஞ்சு, அண்ணா வளர்த்து வைத்திருக்கும் தம்பிகளின் நெஞ்சு - கழகக் காளைகளின் நெஞ்சு. "பெரியாரோ அவரது ஒரே பரமானந்த சீடரோ பேனாவை எப்படி ஓட்டினாலும், "ஓடுவது பேனா மட்டும்தான். அதை ஒட்டி எந்த ஆதரவும் இல்லை" என்பது முன்னேற்றக் கழகக் காளைகளுக்கு நன்றாகத் தெரியும். 'பேரிகை' சொல்வது போல் சொன்னால், பெரியாருக்குத் துணை "மணியம்மையார், சீட்டா நாய், ஒரு 'வான்', வெள்ளி ஜாலராவோடு குருசாமி." என்பதைத் தவிர வேறு இல்லை. பெரியார் இவ்வளவு தூரம் போய்விட்ட பிறகு இந்த உண்மையைச் சொல்வதற்கு நாம் வருத்தப்படவோ, தயங்கவோ வேண்டியதில்லை. கருப்புப் பாதி, சிவப்புப் பாதிதான் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்க் காணக் கிடக்கிறதே தவிர, கருப்புக்கு நடுவிலே சிவப்பு, பல ஊர்களில் காணாமலே போய்விட்டது! ஒரு மகத்தான தலைவர் என்று நாம் உண்மையிலேயே கருதிக் கொண்டிருந்த ஒருவர், தன் அரசியல் வாழ்வின் பின் பகுதியை இவ்வளவு குழப்பமாக்கி மதிப்பிழந்து வருவதில் நிச்சயமாக நமக்கு மகிழ்ச்சியில்லை. ஆனாலும் உண்மை அதுவாக இருப்பதால் சொல்லாமலும் முடியவில்லை. உனக்கு நானும், எனக்கு நீயும் என்று பெரியாரும் காமராசரும் கட்டிக் கொண்டு, இவரை அவரும், அவரை இவரும் புகழ்ந்து கொண்டு, ஒடிந்துவிழும் தூணுக்கு உடைந்து கிடக்கும் அம்மிக்குழவி முட்டுக் கொடுப்பதுபோல் கொடுத்துக் கொண்டு, 'நீ பச்சை, நான் கருப்பு' என்று வர்ணம் பூசிக் கொண்டு, ஒரு மாபெரும் மக்கள் சக்தியைக் கோமாளித்தனமான-ஆபாசமான-அறிவுத் தெளிவில்லாத வார்த்தைகளால் அடக்கிவிடலாமென்று துணிந்து இறங்குவது பலிக்காது; பலிக்கவே பலிக்காது! அதோடு காமராசர் கூறியதுபோல், கூட்டணி, தேர்தல்வரை வருமானால், அண்ணா கூறியதுபோல் பெரியாரும் காமராசரும் சேர்ந்தே வந்தாலும் சந்தித்துப் பார்க்கும்! காமராசரை விருதுநகர்த் தொகுதியிலேயே சந்திக்கும்; சுப்ரமணியத்தைக் கோவையிலேயே சந்திக்கும்; பக்தவத்சலத்தைப் பொன்னேரியிலேயே சந்திக்கும்-"சந்தித்துத் தோற்கடித்தால்தான் என்ன? கொல்லை வழி இல்லையா, பார்க்கிறோம்!" என்பார்கள். அது இருப்பதால் தானே அரசியலில் அவர்கள் உயிர் வாழ்கிறார்கள்! வாழட்டும் வாழட்டும்! எத்தனை நாளைக்கு? பார்ப்போம். ★



> "போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித்
> தூற்றுபவர் தூற்றட்டும்; தொடர்ந்து செல்வேன்
> ஏற்றதொரு கருத்தை என(து) உள்ளம் என்றால்
> எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்; அஞ்சேன்!"

எண்ணம்

மலர் 2 | 20-3-56 | இதழ் 40

# துரோகம் தப்பியதில்லை!

பத்துப்பேர் கூடியிருந்தால் அது ஒரு பொதுக் கூட்டம், பத்துக்கு மேல் ஐம்பதுக்குள் ஆட்களிருந்தால் அது ஒரு மகாநாடு - என்று பூரித்திருந்த அப்பாவித் தமிழகத்தின் தலையிலடித்து, பொதுக் கூட்டம் என்றால் குறைந்தது இவ்வளவு மக்கள் கூடியிருக்க வேண்டும், மாநாடு என்றால் இத்தனை ஆயிரம் மக்கள் வந்திருக்க வேண்டும் என்று உணர்த்திக் காட்டிய பெருமை தி. மு. கழகத்தைத்தான் சாரும். கண்ணியமுள்ள மாற்றுக் கட்சிக்காரர்கள் இதை ஒப்புக்கொண்டு நாட்கள் பல கடந்துவிட்டன. ஆளும் கட்சியினரும் அவர்களுக்கு வெண்சாமரம் வீசித் திரிவோரும், இதற்கான காரணத்தை அறிந்து கொள்வதை விடுத்து நமது வெற்றியை திரையிட்டு மறைக்க நினைக்கின்றனர். மெலிந்த கொள்கையைப் பாதுகாக்க நினைக்கும் ஒடிந்த உள்ளத்தினராகிய இவர்கள், தங்களின் புகழைப் பாடுவதற்கென்றே சில தினசரிகளை வைத்துக்கொண்டு கண்காட்சி நடத்திக் காட்டுகிறார்கள் நாட்டில்! இந்தத் துரோகச் செயலை, இந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ், மெயில், சுதேசமித்திரன், தினமணி முதலிய தேசியத் தினசரிகள் பங்கிட்டு நடத்திக்கொண்டு வருகின்றன. தி. மு. கழகத்தைப் பொருத்தவரையில், கழகத்தைப் பற்றிய உண்மைச் செய்திகளைக்கூட நாங்கள் இந்தத் தேசிய இதழ்களில் எதிர் பார்ப்பது இல்லை. அவ்வளவு நம்பிக்கைக்குப்! பாத்திரமானவர்கள் அந்தப் பத்திரிகையாளர்கள்!

தேவிகுளம், பீர்மேடு தமிழருக்காக வேண்டும் என்பது குறித்து கடந்த இரண்டுமாத காலமாக தென்னாடெங்கும் தினந்தோறும் பொதுக் கூட்டங்கள் நடத்தப்பட்டு வருகின்றன. கொள்கை விளக்கப் பொதுக் கூட்டங்களல்ல; கோணல் புத்தி கொண்டோர் அளித்த தீர்ப்பைக் கண்டிக்க; இதை மறந்துவிடக் கூடாது யாரும். ஆனால் இந்தச் செய்திகள் எதுவும் மேற்சொன்ன தினசரி இதழ்களில் சரியாகப் பிரசுரிக்கப்படவில்லை. இதைக் காட்டிலும் முக்கியமான பிரச்சினைகள், அகில உலகப் பிரச்சினைகள் இடம் பெறுவதால் இவைகளுக்கு இடம் கிடைப்பதில்லை என்று யாரும் வாதிட முன் வந்தால், அவர்கள் வெட்கித் தலைகுனியும் வகையில், நாட்டின் கௌரவத்திற்கே உலை வைக்கக்கூடிய செய்திகளெல்லாம் தொடர்ந்து பிரசுரமாகி வருவதை நம்மால் காண்பிக்க முடியும்.

செல்வந்தர்களைக் கொலைசெய்து, சிங்காரிகளைக் கற்பழித்து, சொத்துக்களை அபகரித்து ஓடும் 'பகல்நேரத்து அரிகரதாஸ்'களின் பஜனைக் கச்சேரிகளும், சிறுமிகளை பலவந்தப்படுத்தியதாகக் கூறப்படும் கடைகெட்ட செய்திகளும் தினம், தினம் பத்தி பத்தியாகப் பிரசுரிக்கப்படுகின்றன. ஆனால் நாட்டை எதிர்நோக்கியிருக்கும் பிரச்சினை மறைக்கப்படுகிறது, தொடர்ந்து அந்த இருட்டடிப்பு நடந்து வருகிறது.

'நியூஸ்' (N-E-W-S) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு, நான்கு திசையிலிருந்தும் சேகரிக்கப்படும் செய்திகள் என்று சொல்லப்படுகிறது. ஆனால் தென்னாட்டில், செய்தித்தாள்கள் என்ற தலைப்பில் நடத்தப்படுபவை ஒரு சார்புடைய செய்திகளையே, தங்களுக்கு ஏற்றபடி கூட்டியும் குறைத்தும் பிரசுரித்து வருகின்றன. நாம் குறைபட்டுக்கொள்வது தி. மு. கழகத்தின் செய்தி புறக்கணிக்கப்படுகிறது என்பதற்காக அல்ல. தி. மு. கழகத்தின் பலத்தை அவர்களும் அறிவார்கள்-நாட்டோருக்கும் தெரியும்.

வெவ்வேறான கோணத்தில் இருந்தவர்களெல்லாம் இணைந்து ஒரே முனையில் கைகோர்த்து நிற்கிறார்கள்,-'தேவிகுளம், பீர்மேடு தமிழருக்கே' என்று முழக்கமிடுகிறார்கள். இவர்களின் உரை கேட்க நகரமே திரண்டு வருகிறது. அவ்வளவு பெரிய மக்கள் சக்தி அவமதிக்கப்படுகிறதே, முறைதானா? என்று கேட்கிறோமே தவிர, தி. மு. கழகத்திற்கோ, அதன் தலைவர்களுக்கோ முக்கியத்துவம் கேட்கவில்லை.

ஆயிரக்கணக்கில் மக்கள் கூடுகிறார்களே? ஏன் அடக்கம் காத்து அமைதி வழி நின்று கூட்டமுடிந்து கலைந்து செல்கிறார்களே என்ன காரணம்? இதுபற்றி சிறிதும் பிரசுரிப்பதில்லையென்றால், பத்திரிகை வாங்குவோர் ஏமாளிகள் என்ற எண்ணம் போலும்!

சர்வகட்சிக் கூட்டணி நடத்திய பொதுவேலை நிறுத்தச் செய்திகளை தேசியத் தினசரிகள் தொடர்ந்து பிரசுரித்துக்கொண்டு வந்திருந்தால், பண்டிதநேரு கூட்டணியைத் தவறாகப் புரிந்துகொண்டிருக்க முடியாது. வீம்புக்காக நேரு அவ்வாறு பேசினாரென்றால் அது வேறு பிரச்சினை - அவரது குண விசேடம்!

அதுதான் போகிறது. பொது வேலை நிறுத்தத்திற்கு முன்பு, அது பற்றிய செய்திகளைப் பிரசுரித்தால் நேரு மருளுவார் என்று எண்ணியிருப்பார்கள் தினத்தாள்களின் அதிபர்கள் என்று தள்ளிவிடலாம். அர்த்தாலுக்குப் பிறகாவது ஒழுங்காக நடந்துகொண்டனவா அந்தப் பத்திரிகைகள்? உண்மையைப் பிரசுரித்து அவர்களுடைய நேருவின் அறியாமையையாவது விளக்கினார்களா?

நாட்டைத் துண்டிக்க விரும்புவோர்தான் தென்னாட்டில் அர்த்தால் நடத்தியதாக நேரு பார்லிமெண்டில் பேசினார் சமீபத்தில்! தென்னாட்டின் உண்மை நிலையைப் புரிந்துகொள்ளாமல் பண்டித நேரு தவறாகப் பேசிவிட்டார் என்பதை விளக்க தி. மு. கழகத் தலைவர்கள் அனைவரும் மார்ச்10-ந் தேதி நுங்கம்பாக்கத்தில் தி. மு. க. திடலில் சொற்பொழிவாற்றியிருக்கிறார்கள். நேருவுக்கும் அவரது கங்காணியாக தென்னாட்டில் வீற்றிருக்கும் காமராசருக்கும், வார்த்தைக்கு வார்த்தை பதில் சொன்னார் அறிஞர் அண்ணா. அதுபற்றி இதுநாள்வரை எந்தத் தினசரியிலேயும் செய்தியைக் காணோம்.

வாக்கெடுப்பு நடத்தலாம் என்று சொன்ன பண்டிதரே, எப்போது நடத்துவீர்கள்! எங்களுக்குச் சம்மதம்-

சர்வகட்சிக் கூட்டணியின் நோக்கம் நாடு பிரிப்பதல்ல. நாட்டுப் பிரிவினை கோரும் தி. மு கழகம் அதில் பங்கேற்றிருக்கிறது. நீங்கள் தவறாகப் புரிந்துகொண்டீர்கள்-

—இவை இரண்டும் நேருவுக்குத் தெரியவேண்டிய மிக மிக முக்கியமான விளக்கங்கள். இவை மறைக்கப்படுகின்றன என்றால், தமிழ்நாட்டுக்கு சென்னையிலிருக்கும் தினசரிகள் துரோகமிழைக்கின்றன என்று தான் பொருள். உண்மையும் அதுதான்.

துரோகம் தப்பியதில்லை! தண்டனைக்குள்ளாகியிருக்கிறது. இது வரலாறு தரும் படிப்பினை. தினசரிகளுக்கு இதை நினைவுப்படுத்துகிறோம், தொழில் நடத்துவது தமிழகத்தில்! எழில் மிகுந்த வாழ்வு நடத்துவது தமிழகத்தில்! ஆனால் ஏமாற்றப்படுவது தமிழ் மக்கள்! பொறுமைக்கும் எல்லையுண்டு!

## அரசியல்

★ திருச்சியில் நடைபெற இருக்கிற தி. மு. கழக இரண்டாவது மாநில மாநாட்டுக்கான ஆக்க வேலைகளைக் கவனிப்பதற்காக அறிஞர் அண்ணா அவர்கள் 10-3-56-ம் தேதி இரவு திருச்சிக்குப் புறப்பட்டார்கள். அங்கே பத்து நாட்கள்வரை அண்ணா அவர்கள் தங்குவார்கள். சொல்வலர் ஈ. வி. கே. சம்பத் அவர்களும் ஈரோட்டிலிருந்து புறப்பட்டு திருச்சி வந்து சேர்ந்தார். அவர் அங்கு அண்ணாவுக்குத் துணையாக இருந்து காரியமாற்றுவார்.

★ லண்டன் டைம்ஸ் பத்திரிக்கை காலம் சென்ற சுபாஸ்போசை 'இந்தியத் துரோகி' என்று குறிப்பிட்டிருப்பதுபற்றி, நேருப் பண்டிதரின் காரியதரிசி திருமதி லட்சுமி மேனன் மார்ச் 7-ம் தேதி அன்று பார்லிமெண்டில் தனது கருத்தைத் தெரிவித்திருக்கிறார். இது சம்பந்தமாக பிரிட்டிஷ் சர்க்காருக்கு, மறுப்புரைக்க இந்திய சர்க்காருக்கு நோக்கமில்லை என்றும் ஒரு ஜனநாயக நாட்டில் பத்திரிகைகளுக்கு எழுத்து சுதந்திரம் உண்டென்றும் திருமதி லட்சுமி மேனன் கூறி இருக்கிறார்.

★ 18-3-56 மாலை 6 மணிக்கு கான்ரான்ஸ்மித் நகர் (திரு. வி. க.) திடலில் 19வது வட்ட தி. மு க. செயலாளர் தோழர் டி. நடராசன் தலைமையில், பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன், இளம் பரிதி, டி. எஸ். சண்முகம், கதிர் டி. சுப்பிரமணி ஆகியோர் பேசுவர்.

★ 18-3-56 காலை 9 மணிக்கு திருச்சி தேவர் மன்றத்தில்
திருச்சிநகர
தி. மு. கழக ஆண்டு விழா
சிறப்புக் கூட்டம்
தலைவர்: அ. பொன்னம்பலனார்.
சொற்பொழிவாளர்கள்:
கலைஞர் மு. கருணாநிதி
கண்ணதாசன்.
இசைமுரசு நாகூர் ஹனீபா குழுவினருடன் இன்னிசை வழங்குவார்.
நன்கொடை அணா 4.
நகர தி. மு. க. திருச்சி

மட்டக்களப்பு நாடோடி இலக்கியம்

# பாடும் மீன்கள்!

ஈழம் இலக்கிய வளமும் நிலவளமும் நீர்வளமும் மிகுத்து இலங்கும் நல்லிடம். இந்த நாட்டின் சொந்தக்காரர்கள் அழகு தமிழ் பேசும் அருமை மக்கள். இன்று ஈழத்தில் இருபத்திஞலு இலட்சம் தமிழ்ப் பேசும் மக்கள் வாழ்கிருர்கள். தோன்றுதோட்டு தமிழ் பண்பாட்டில் திளைத்த திருவிடம்தான் மீன் பாடும் தேன் நாடான மட்டக்களப்பு

மீன் பாடுகிறது என்று நான் சோல்வதைக் கேட்டு ஆச்சரியப்படலாம். மட்டக்களப்புத் தமிழகத்திற்கு அழகு தரும் சிற்ருறு ஒன்றிருக்கிறது. அதைப் பரவைக்கடல் என்றும் அழைப்பார்கள் அந்த எழில் மிகு வாவியில் வாழ்ந்து இன்னிசை நாதம் எழுப்புகின்றன பாடும் மீன்கள். பாடும் மீனை இது வரை யாராவது கண்டது கிடையாது. ஆனல் அதன் இசையைக் கேட்டனர் - கேட்கின்றனர் மக்கள் பாடும் மீனை "ஊரி" என்று மட்டக்களப்புத் தமிழகத்தில் வாழும் மக்கள் அழைப்பார்கள். இப்பாடும் மீன்களை காலஞ்சென்ற ஈழத்துத் தமிழறிஞர் விபுலானந்த அடிகளார் "இசையர மகளீர்" என்று அழகு நாமமிட்டு அழைப்பார். இப்பாடும் மீன்களின் இன்னிசைக் கீதம் கேட்க மக்கள் பால்போன்று தண்ணொளி பரப்பும் பூரண வெண்ணிலா வேளையில் ஓடங்களில் ஆற்றில் ஊர்ந்து செல்வர். பாடும் மீன்கள் இன்னிசை எழுப்பும் நேரத்தை மிகத் தெளிவாக விபுலானந்த அடிகளார் தன், பாடும் மீன்களைப்பற்றிய ஆராய்ச்சியுரையொன்றில் கூறுவதைப் பாருங்கள்.

**மாசகன்ற மணிவிசும்பில் வயங்கு நிறை மதியம்**
**மலர்க்கிரண ஒலிபரப்ப வளரும் இளவேனில்**
**வீசு தென்ற லொடு கூடி விளையாடல் கண்டு**
**விண்ணகத்தார் மண்ணகத்தில் விழைவு கொளும் யாமம்.**

மட்டக்களப்புக் கருகாமையிலுள்ள கல்லடிப் பாலத்தடியில் அமைதியான வேளையில் இசையர மகளிரின் இன்னொலியைக் கேட்டனுபவிக்கலாம் இயற்கையழகு மிக்க வாவியும் அதன் கண்ணே வாழ்ந்து அதிசய ஒலி எழுப்பிவரும் இசையர மகளிரும் மட்டக்களப்புத் தமிழகத்தின் சிறப்புக்கு - பெருமைக்கு எடுத்துக் காட்டுகளாக இலங்குகின்றன. பாடும் மீன்கள் ஒலியெழுப்பும் வேளையில் எத்தகைய அமைதி யேற்படும் தெரியுமா? தேன் போன்ற வெண்ணிலவு வேளையிலே பூம்பொழில்களில் மலர்களின் இதழ்களுக்கிடையே ஏற்படும் அணைப்பு எனும் சிறையில் வண்டுகள் நித்திரை செய்யும் நேரத்தில் - அலையாயும் கடலில் முத்துவகைகள் உறங்குகின்ற பொழுதில் அமைதியில் திளைத்த மட்டக்களப்பு வாவியில் இசையர மகளிரின் இன்னிசை யொலிக்கும் என்பதை விபுலானந்த அடிகளார் பின்வரும் பாடல் மூலமாகத் தெளிவுறுத்துகிருர்.

**தேனிலவு மலர்ப்பொழிலிற் சிறை வண்டு துயிலச்**
**செழுந் தரங்கத் தீம்புனலுள் நத்தினங்கள் துயில**
**மீனலவன் செலவின்றி வெண்ணில விற்றுயில**
**விளங்கு மட்டுநீர் நிலையில் எழுந்ததொரு நாதம்**

இந்தப் பாடும் மீன்களைப்பற்றி மேல் நாட்டாரிடத்து சில சந்தேக எண்ணங்களுண்டு. அவர்கள் பலரகமான அபிப்பிராயங்கள் கூறுவார்கள். இப்பாடும் மீன்கள்பற்றி ஆராய்ச்சி செய்ய வந்த பேராசிரியர் ஜான் என்பார் "பாடும் மீன்" என்ருென்றில்லையென்றும் மின்சாரக் கம்பிகளில் காற்று மோதுவதால் ஏற்படும் ஒலி என்றும் ஒரு பெரும் புதிரைக் கிளப்பிவிட்டார் இற்றைக்குச் சில ஆண்டுகளுக்கு முன்பு! இந்தப் பாடும் மீன்கள் இருட்காலங்களில் பாடுவதில்லை. இதையறியாத பேராசிரியர் ஜான், இருள் காலத்தில் ஆராய்ச்சி செய்து தோல்வியடைந்தார். எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பே முதல் - மின்சாரம் மட்டக்களப்பை எட்டிப்பார்க்காத காலத்திற்கு முன்பே மட்டக்களப்பு வாவியிலிருந்து இசையர மகளிரின் இன்னிசை யொலிகளை மக்கள் கேட்டனர். இதற்கு வேண்டிய சான்றுகளுண்டு.

முழுமதிக் காலங்களில் இப்பாடும் மீன்களுக்கு மகிழ்ச்சி பொங்கிவிடும் வண்ண நிலாவின் தண்ணொளியை நீரிலே காணும் போது களிப்பு ஏற்படுவதால் இன்னிசையொலி யெழுப்புகின்றன. இந்த இசையர மகளிர் ஒரு நீர் வாழும் ஜந்துகளின் கூட்டமாகும். மட்டக்களப்பு வாவி மாலை வேளைகளில் மக்களின் மனதைக் கவரும் சாதனமாக அமைந்திருக்கிறது. பாடும் மீன்களில் இசையை மட்டக்களப்பு மிக்கேல் கல்லூரியினர் ஒலிப்பதிவு செய்து வைத்துள்ளனர் அத்தோடு "பாடும் மீன்" என்ருெரு ஆங்கில இதழையும் வெளியிட்டு வருகின்றனர்.

மட்டக்களப்பு வாவியிலே இசையர மகளீர் எனப்படும் பாடும் மீன்கள் வான்போல் வளர்ந்திருக்கும் வண்டமிழர் பெருமைகளை பண்ணளத்து பாடுகின்றன என்று நாம் போற்றுகிருேம். கிழக்கு இலங்கையின் நிலையைப் புதுக்க - வளம் பெருக்க-வாழ்வு செய்ய நாளிலும் பொழுதிலும் வெண்ணிலா வேளையில் பாடும் மீன் தன் இன்னிசை யொலியால் முயல்கிறது

மீன் பாடும் பெருமை பெற்ற ஒரு நாடு எங்கள் நாடு என்று மட்டக்களப்புத் தமிழக மக்கள் பெருமைப்படுகிருர்கள் பொங்கற் புது நாட்களில் இசையர மகளிரின் இன்னிசை கேட்டு மங்கள மடைவது எங்கள் தமிழ் மக்களின் தனிப்பேறு என்பதுண்மை.

பாடும் மீனல் மட்டக்களப்பு பெருமையடைகிறதா? மட்டக்களப்பால் பாடும் மீன் பெருமையடைகிறதா? என்பது ஆராய்ச்சிக்குரியது யாழினும் குழலினும் இனிய இன்னொலியைத் தரும் தமிழகம் - மட்டக்களப்பு என்பதில் சந்தேகமில்லை

வாழ்க இசையர மகளீர்! வளர்க மட்டக்களப்பின் மாண்பு!!

—எப். ஜி. ஜெயசிங்கம்.

ஈழத்துக் கவிஞர்கள்

7

# தமிழின் வாசம்!

பூத்தமலர்ப் பொழிலெமது தமிழேயென்பர்
புத்தமுத மொழியென்று புகழ்ந்து கொள்வர்
ஏத்தியுல கினிமையென விறைஞ்சு மென்பர்
இல்லாத தொன்றில்லை யிதிலே யென்பர்
மூத்ததெங்கள் தமிழெல்லா மொழிக்கு மென்பர்
முத்தமிழை முழுமுதலே தந்ததென்பர்
சாத்திரங்கள் சொல்லுநூல் உண்டோ வென்ருல்
சாகரம்வந் துண்டதெனச் சாற்றுவாரே!

நிரைநிரையாய் நித்திலமும் வைரம் பொன்னும்
நீலமணிப் புதையலுமாய் நிறைந்து நீள
வரைவரையாய்க் கவிதைவளம் வளருதென்பர்
வடித்தெடுத்த நறவொழுகும் வசனமென்பர்
புரையறியா விலக்கணத்தின் புனித மெங்கும்
பொலியுதெங்கள் மொழியிலெனப் புகல்வர்சற்றே
உரைநடைநூல் முன்னேயொன் றுளதோ வென்ருல்
உண்டதெலாங் கடலென்றே யுரைப்பர் மாதோ!

செறுதிரையின் கடலேநீ செகத்தி லெங்கள்
செந்தமிழைத் தின்றதென்ன செப்புவாயே
குறுமுனியன் கையடக்கிக் குடித்தா(!)னென்ற
கோபத்தா லோவிந்தக் குற்றஞ் செய்தாய்?
வெறுமுதரம் நிறைதமிழை விழுங்கியுண்டு
வெண்டரளம் மணிபொன்னய் விளைந்தபஞ்சாய்
எறிசுடரின் சங்கங் ளாகி யீன்றே
இருநிலத்தில் எங்கணுமே யெறிவாய்மன்னே.

அட்டதிக்கும் புகழ்பரவி யடுக்கி நிற்கும்
அரியதமிழ் மொழியினிலே ஆங்கிலத்தின்
சட்டமெலாம் பெயர்த்தெழுதல் வேண்டுமென்ருல்
தனித்தமிழில் எழுதென்றே தடுத்துநிற்பர்
மட்டமந்தத் தனித்தமிழில் வார்த்தை யென்ருல்
மாசுறுத்தும் மற்றமொழிக் கலப்பேயென்பர்
பட்டமரந் தன்னில்இலைப் பச்சைகாணப்
பாதையொன்று காட்டிடுவீர் பாருளீரே!

வேற்றுமொழிச் சொற்களுக்குத் தமிழிலாய
வேஷமிட்டுக் குடியேற்றிப் பிரசை யாக்கி
ஆற்றலுறுந் தமிழ்ப்பதங்கள் ஆகச் செய்தே
அத்தனையும் எழுத்திடையே யாண்டுகொள்வோம்
போற்றுகின்ற மேனுட்டுச் சாத்திரங்கள்
புகல்வதெலாம் தமிழினிலே புகுத்துவோமே
காற்றுலவு மிடமெங்குந் தமிழின் வாசம்
கலந்திடநங் கலைத்திறனைக் காட்டுவோமே!

—சோ. சண்முகபாரதி, கொழும்பு.

தம்மம்பட்டியில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்த இடத்தை சொல்வலர் ஈ வி. கே. சம்பத், எம். பி. சுப்ரமணியம் எம். எல். ஏ, சிற்றுளி சுப்ரமணியம் ஆகியோர் பார்வை இடுகிருர்கள். போட்டோ: சாமி ஸ்டுடியோ, சேலம்.



# மனைவிக்கு... கணவர்க்கு...

— நாகமுத்தையா —

8

அன்புக் கமலா,

இதுவரை பல கடிதங்கள் எழுதிவிட்டாய். இருந்தாலும் சென்ற வாரம் நீ எழுதி இருந்த கடிதம் உண்மையிலேயே எனக்குரொம்பவும் பிடித்திருந்தது. உலகத்திலேயே நான் விரும்புவது ஒன்றே ஒன்று தான்-அது உன் கடிதம்.

தாரம், தங்கை பற்றிய உன் பிரச்னை அவ்வளவு ஏற்புடையதாக இல்லை. நான் முன்னர் எழுதிய கடிதத்தை நீ தவறுதலாகப் புரிந்து கொண்டுள்ளாய். கண்ணகி—மாதவிக்கு இருந்து வந்த செம்மைப் பெருமையைப் பற்றியே வேசியர் மனைவியர் உறவைக் குறித்துப் பேசும் போதெல்லாம் சொல்லுவர் தமிழ்ப்புலவர். அவர்கள் சொல்லுவதையே சொல்லவேண்டாம் என்று எண்ணியதால் இலக்கியத்தில் இருந்து வேசியர் மனைவியர் இருவரை உன் மனக்கண்முன் கொண்டுவந்தேன்.

'முகந்தால் வாடிவிடும் அனிச்சம் பூ, தொட்டால் துவண்டுவிடும் துடியிடையாள்' என்று நான் கூறியபோது நீ என்ன சொன்னய்? அது நினைவு இருக்கிறதா? 'அத்தான், இந்த அனிச்சம் பூவிற்கு வாட்டமே இடையாது. இப் பூ, என் அத்தான் தொடத்தொட பூத்து மணந்தரும், பிறர் தொட்டால் வாடி வதங்கி அன்றே வாழ்விழந்து போகும். ஆனல் பிறர் தொடுவதற்கு இவ்வுடல் இறந்தால் ஒழிய இடந்தரமாட்டாது. ஆகவே, இப் பூ வாடாத அனிச்சம் பூ என்ருயே?' நினைப்பிருக்கிறதா?

கடந்த காலச் சம்பவங்கள் மனித உள்ளத்திற்கு மகிழ்ச்சி தரவல்ல இன்பச்சுரங்கங்கள் ஆகும். இப்படி எத்தனையோ சொன்னய் நானுந் தான் சொன்னேன். சொன்னபடி செய்யவில்லையே என்று நீ வசவு பாடுகிருய் நான் வருந்துகிறேன். முன்பு ஒருவன் தன் மனைவியை விட்டு விட்டு பொருள் தேட வேற்றுநாடு சென்ருன். அவனுக்கு அவன் மனைவி நினைவு வரவே (இப்போது நடப்பதைப் போல)ஒரு கடிதம் எழுதினனும். அக்கடிதம் ஒரு கவிதை:

**"என்று திரும்பி வருவீர்? எனவினவிக் குழைந்து**
**கன்றிய நெஞ்சொடு கண்ணீர் உகுத்து வெண்ணீறுதந்து**
**குன்றுநிகர் கொங்கை மீதே அணைத்துக் கொடுத்தவிடை**
**ஒன்றை நினைத்தல்லவோ என்றன் ஆகம் உருகுவதே"**

அதுபோலத்தான் நானும் இன்று உனக்காகவே-நீ ஒருத்திக்காக - உயிர் வாழ்ந்து வருகிறேன். உன்னைக் காணவேண்டும் என்ற ஆசையால்தான் என் உயிரும் உடலைவிட்டுப் போக மறுத்து நிற்கிறது.

இவ்வியன் உலகத்தில் வேசியர்கள் இல்லையேல் தமிழின் நல்ல நல்ல பாடல்கள்கூட இல்லாமல்தான் போயிருக்கும். தலைவன் பிரிவும், தலைவியின் துயரும் செவிலியின் கூற்றும், நற்றுய் இரங்கலும் தமிழ் இலக்கியத்தில் தலையாய இடம் பெறுவதற்குக் காரணமே இவ்வேசியர் கூட்டந்தானே?

**'நேற்றிருந்த நிலவும் அந்நேரம் என்நினைவிருந்த**
**நினைப்பும் இளந் தென்றல்**
**காற்றிருந்த சுகமும்உன் ஆணைஎன்**
**கருத்திருந்ததும் யாதென்று சொல்வேன்?"**

என, இதோ வருகிறேன் என்று பிரிந்துபோன தலைவனைப் பற்றி தலைவி பாடுகையில் துன்பம் ஓடிவிடுகிறது, இன்பம் சுவை எழுப்பி நிற்கிறது.

வேசியரை நினைத்தால் என் உள்ளம் வேதனைகொண்டு வெறியுற்று விம்முகிறது வேசியர். வேசிகள்... ஆம், அவர்கள் நோயின் நிலையிடம், வஞ்சனையின் வாழ்விடம், பணத்தின் புதைஇடம், பண்பாளர் நெருங்காத பாழிடம்.

இன்பம் எட்டளவில்தான். நடப்புலகில் துன்பம் துன்பமே. இதற்கெல்லாம் காரணமாகியதன்னை நாடி வந்தவன் தேடித்திரட்டிய செல்வத்தையெல்லாம் கூடிப் பறித்துக்கொண்டு, தன் பணப்பெட்டி நிரம்பியவுடன் 'ஓடிப்போ' என்று அவனை நிந்தித்து விரட்டி ஓட்டிவிட்டு அடுத்தவனை நோக்கி கதவைத் திறந்து வாடிக் கிடக்கும் வஞ்சகக்காரிகளை நல்லவர்கள் நாடமாட்டார்கள் என்று நாலடியார் கூடக் கூறுகிறது.

**ஏமாந்த போழ்தில் இனியார்போல் இன்ருராய்த்**
**தாம்ஆர்ந்த போதே தகர்க்கோடாய்-மான்நோக்கில்**
**அந்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே**
**செந்நெறிச் சேர்தும்என் பார்."**

அண்டியவனிடம் அவனது செல்வத்தை அறவே கவர்ந்து கொண்டு தாம் மகிழ்ச்சியுடன் வாழும் வரையில் அவனையும் மகிழ்ச்சியுடன் வாழச் செய்வர். கைப்பொருளையெல்லாம் அறவே கைக்கொண்டதும் அவனைக் கவலைக் கடலுள் வீழ்த்திவிடுவர். ஆட்டுக்கொம்பைப்போல திருகுதலைப் பேச்சும், மான்விழி போன்ற பார்வையை உடைய திருட்டுக்குணம் பொருந்திய செய்கையினைக் கொண்ட வேசியரை நல்ல நெறியில் நிற்க ஆசைப்படுபவர்கள் அடையமாட்டார்கள் என்பதுதான் மேலே தந்த பாடலின் கருத்து.

அப்புலவனின் திறத்தை வியந்து அப்புலவன் கூற்றுப்படி இனி அவ்வேசியரைக் கருத்தாலும் கருதேன் என்று உறுதியும் கூறுகிறேன். எனக்கு நீ; உனக்கு நான். எந்திழையே, எக்கம்விடு இனிது வருவேன் இன்னும் சில வாரங்களில்.

உன்னன்புள்ள,
மாவண்ணன்,

திரு. நாகமுத்தையாவின் 8-வது கடிதத்துக்கு பதில் தருபவர்கள் இலக்கிய எடுத்துக் காட்டுகளுடன் 19-3-1956க்குள் எழுதி அனுப்ப வேண்டுகிறோம்.

— இளசை. இளங்கோவன் —

அன்புள்ள அத்தான்,

'அறியாமல் தொட்டாலும் நெருப்பு சுடும்' என்பார்கள். நான் அறிந்தே தொட்டேன் என அச்சமின்றிக் கூறுகின்றீர்கள்.

**"உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்**
**அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே!"**

என்ற அமரகவியின் ஆற்றலை யூட்டும் பாடலை இதுபோன்ற இழிதரும் பழிசெயலுக்குப் பயன்படுத்துவீர்கள் என எள்ளளவும் எண்ணவில்லை அத்தான். சுற்றுப்புறம், சூழ்நிலைமீது குற்றத்தைச் சுமத்தும் கற்றவர் நிலையில் நிற்றிடவிழையும் நீங்கள், பொசுறபோடிய புண்ணைப் புனுகு பூசி மறைக்க முயல்வதுபோல் வேசியின் வலையில் வீழ்ந்தமையெல்லாம் மாசடைத்தன்றென மறைக்க முயல்கின்றீர்கள் ஆசிரியர் கூற்றைக் காட்டி. அத்துடன் அமையாது, உருவம், பருவம் ஒப்புமை காட்டித் தப்பினை மறைக்கத் தனிவழி வகுத்துக்கொள்ளுகிறீர்கள். அகலியா தேவியை அடைய விரும்பிய இந்திரன், மந்திரமும் தந்திரமும் துணைக் கொண்டு, கௌதமர் உருக்கொண்டு புணர்ந்தானும். தேவி, பெண்மையை இழந்தபின் உண்மையை உணர்ந்ததாகப் புராணம் கூறுகிறது. அதுபோல, 'என் உருக்கொண்ட பெண்வயமானேன்; அரும்பொருள் இழந்து அருந்துயருற்றேன்; அருந்தொகையே! அழைப்பினை விடுத்து ஆட்கொள விழைகிறேன்' எனச் சோரம் போனபின் பேரம் பேசுவது பேதமையினும் பேதமையன்ருே அத்தான்.

**"சான்ருேர் செல்வம் என்பது சேர்ந்தோர்,**
**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென்கண் செல்வம் செல்வம் என்பதுவே"**

என்ற நற்றிணைப் பாடலைத் தெற்றென உணர்ந்த நீர் என் தலைமைக்கும் குற்றம் புரியா தொழிக எனத் தோழி உரைத்தகாலை, 'அன்னுந்தை எந்திய வனமுலை தளரினும்' 'நல்நெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும் பன்னெடுங்காலம் பண்புடன் இணைந்து இன்புடன் வாழ்வோமென நீங்கள் ஏற்றமுறையில் சாற்றிய பதிலைக் காற்றோடு விட்டுவிட்டீர்கள். தலைமை வருத்தினல் மனிதப் பண்பையுமிழக்கலாமென்று 'தமிழ்நெறி' கூறிற்ருே அத்தான்?

**ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேட்சென்றுர்**
**வருநாள் வைத்தேங்குபவர்க்கு"**

என்ற வள்ளுவர் குறளின் உள்ளுறைப் பொருளைத் தெளிவின் உணர்ந்த உங்களின் கள்ளமில் உள்ளமா பொழுதினைப் போக்கும் பொல்லாங்கு செய்யுமளவிற்குக் கல்லாக மாறிவிட்டது?

'குலத்தைக் கெடுக்குமாம் கோடரிக்காம்பு' அதுபோன்று, அன்ன நடையழகும், பின்னல் சடையழகும், மின்னல் இடையழகும், கன்னல் மொழியழகும் கொண்டு, பெண்குலத்திற் கின்னல் பலபுரியும் கள்ளி வலை வீழ்ந்தும் கைப்பொருள் இழந்தபின் மெய்ப்பொருளுணர்ந்தமை கேட்டு உளமகிழ்கின்றேன். மகிழ்ச்சியில் அலர்ந்தவென் இதழ்கள் உலர்ந்திடா வண்ணம் உவகையுடன் வருகை தந்து உவப்பிக்கவேண்டுகின்றேன் அத்தான். 'உற்றான் அளவும் நோய் அளவும் காலமும்' எனப் பொய்யில் புலவன் புகன்றிருப்பதால், ஞாலத்தில் ஆலத்தைப் பருகினும் காலமறிந்து கடனாற்றின் அனுகூலத்தைப் பெறலாமென்பது தாங்கள் அறியாததோ அத்தான்? நீண்டநாள் கடத்தின், நீரினைப் பிரிந்த மீனினைப்போலத் துடித்து மடிந்திடுவேன். நடுநிலையுணர்ந்த நீங்கள் இக்கொடுமதியாளின் படுதுயரகற்றப் பறந்து வருவீர்கள் அத்தான்.

'திரைகடல் ஓடித் திரவியம் தேடச்சென்ற' தலைவன்,

குறித்த நாள்கடந்தும், தலைவி மறித்திடும் நிலையில் மடலை விடுத்தும், கடலினைக் கடந்து காதலி தன்னின் சாதல் தவிர்க்க வந்திலன். நம்பிக்கை யிழந்த மங்கை நல்லாளுக்குத் தோழி ஆறுதல் மொழி கூறிட விழைந்து, "தோழி! காதலர் நிலம்புடை பெயர்வதினும் கூறிய சொல்புடை பெயர்தலோ இலர்; ஆதலின் தூதினைப் புவோம் "என்னலும் தலைவி," அம்முயற்சி வேண்டா; அவர் எவ்வித் எத்தன்மை உடையவராயிருப்பினும் இனி அவருடைய நினைப்பை அகற்றுக! நாம் உறுதுயர் உணரமறுக்கும் செருநர்போன்ற அவர்தம் நட்பு இருந்தென்ன? போயென்ன? மலைவாழ் குறவர் தெரியாது அறுத்துவிட்டச் சந்தனமரம் வற்றி, உலர்ந்து, காய்ந்து அழிதல்போல், அறிவையும் உளத்தையும் அவர்பால் விட்ட என்னுடல் அழிந்துபோவது திண்ணம்; அவர் வருகையும் எனக்கு உவகையளித்து உயிரினைத் தாராது; ஆதலின் அவர் வாராதிருத்தலே நன்று; ஆனல் ஒன்று; பிரிவினல் பெருந்துயருற்று பெருமகிழ் விழந்த நிலையை நம்மவர் காணுதிருப்பாராக!" என்ருள். இக்கருத்தினை உணர்த்தும் பழந்தமிழ்ப் பாடலைப் படித்திருப்பீர்கள். எனினும் நினைவிற்குக் கொண்டுவர நேரம் இருந்திருக்காது. அதனல் எடுத்து வரைந்தேன்; படித்து உணர்க!

**"வறிதால் இருளை! என்யாக்கை? இனிஅவர்**
**வரினும் நோய் மருந்தல்லர்; வாராது**
**அவணர் ஆகுக காதலர்; இவண்நம்**
**காமம் படர்அட வருந்திய**
**நோய்மலி வருத்தம் காணன்மார் எமரே."**

அடுத்து எனக்கும் நீர் அஃதே அத்தான். ஆதலின், அடுத்து வரும் துக் கடிதம் தொடுத்துத் [illegible] புழுப்போல் என்னைத் துடிக்கவிடா தீர்கள். வறட்சியால் வருந்திய உலகம், தொழிலினை மேற்கொண்டு [illegible] லினைப் பெறுமாறு பழமையான பருவமழை பொழிதல்போல, கூந்தல் படிந்த மாசபோக்கி மலரினைச்சூடி, உங்கள்மாட்டு ஊடல் செய்து [illegible] மகிழ கூடிய விரைவில் நாடி, வருமாறு மீண்டும் மீண்டும் வேண்டுகின்றேன் அத்தான்!

அன்புள்ள
கமலா,

# சிலம்பு வழங்கும் செல்வம்

இராசன்

பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை, எம். ஏ., எல். டி.

★ ★ ★

சிலப்பதிகாரம், தமிழர்க்குக் கிடைத்த பெரும் புதையல் என்பதற்குச்சான்றுகள் காட்டி விளக்கிவரும் நமது பன்மொழிப் புலவர் அவர்கள் இந்த இதழில் மிக முக்கியமான கட்டத்திற்கு வந்திருக்கிருர்கள். சிலப்பதிகாரத்தைப்பற்றி தவருகப் பிரச்சாரம் செய்து வரும் சில பெரும் புள்ளிகளுக்கு இந்த இதழில் பதில் கூறத் தோடங்கியிருக்கிருர் அப்பாதுரையார்.

—ஆர்.

★ ★ ★

அப்பண்பு, சிலப்பதிகாரத்தைத் தமிழர் பண்பாட்டுக்குரிய நூல், தமிழர்க்குப் பெருமை தரும் நூல் என்று போற்றும் சிலர் கொண்டாடியதே என்பதில் ஐயமில்லை. மேற்கூறிய மூவரும் தமிழை ஆரியத்தோடு இணைத்துப்போற்றுவதிலேகருத்துக் கொண்டார்கள். தமிழின் பெருமை எதுவும் ஆளும் இனத்தின் மொழியாகிய ஆரிய சமஸ்கிருதத்துக்குப் போட்டியாய் விடக்கூடாது என்று 'திரிகரண சுத்தியாக' எண்ணி, அதற்காகப் பாடுபடுபவர்கள்: போற்றும் சிலர் கருத்தையே வலியுறுத்தும் வி. ஆர். ஆர். திட்சிதர் சிலப்பதிகாரப் பண்பாட்டை விரிக்கும் பகுதியில்—அதை ஆரியப் பண்பாடே என்று விளக்கும் பகுதியில் இதைக் காணலாம்.

மூவரொடு நால்வராகப் பேராசிரியரும், நால்வரோடு அணிமையில் ஐவராக வந்து நிறைவுற்ற பெரியார் ஈ. வே. ரா. அவர்களும் சிலப்பதிகாரத்தின் ஆராய்ச்சியில் ஒருங்கே கூட்டுச் சேர்ந்த மாயக் கூட்டின் மறை திறவு இதுவே.

## உவப்பு உவர்ப்பற்ற நடுநிலை ஆராய்ச்சிகளல்ல

ஆனல் நால்வரும் தமக்கு விருப்பமான ஒரு முடிவுக்காகக் கூட்டுச் சேர்ந்தாலும், தனித் தனி 'அவாமுடிவுகள்' அல்லது 'முடிபவாக்கள்' உடையவர் என்பதைக் கூர்ந்து கவனித்தால், ஆராய்ச்சிகள் உவப்புவர்ப்பற்ற நடுநிலை ஆராய்ச்சிகளல்ல என்பது விளங்கும்.

பேராசிரியர் வே. சு. சு. அவர்கள் வெளியிட்ட 'சிலப்பதிகாரமும் ஆரியக் கற்பனையும்' என்ற சிற்றேட்டுக்குப் பெரியார் ஈ. வே. ரா. அளித்த முன்னுரையின் பின்குறிப்பில் அவர் கூறுவதாவது:

"வித்வான் வே. சு. சுப்ரமணிய ஆச்சாரியார் அவர்கள் ஆரியக் கொள்கைப்படி ஏற்பட்ட சாதிகளில் கம்மியர் வகுப்பைச் சேர்ந்தவராய் இருப்பதாலும், சிலப்பதிகாரத்தில் பொற்கொல்ல வகுப்பை இழித்துக் கூறியிருப்பதாலும் அதன் காரணமாய்ச் சிலப்பதிகாரத்தில் குற்றங்காண முன் வந்தார் என்று ஒரு சிலரும்; மற்றும் அதுபோலவே சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் ஆரியக் கொள்கையின்படி ஏற்பட்ட சாதிகளில் ஒன்ருகிய வைசிய சாதியைச் சேர்ந்தவராய் இருப்பதாலும் அதன் காரணமாய்ச் செட்டியார் அவர்கள் சிலப்பதிகார ஆராய்ச்சியில் ஈடுபட்டு அதைப் பெருமைப்படுத்தி வருகிருர் என்றும் இரு காரியங்களுக்கும் உள் எண்ணம் கற்பிப்பவரைக் காண்கிறேன்."

இந்தச் சாதிச் சந்தேகம் இராவ் பகதூர் வையாபுரி போன்ருர் தலையிட்டால் அகன்று விடுவதாகப் பெரியார் ஈ. வே. ரா. அவர்கள் கருதியுள்ளார்கள். தொடர்ந்து அவர் கூறுவது இதைக் காட்டுகிறது.

"ஆனல் இந்த இரு வகுப்பார் தவிர, மற்றும் பல வகுப்பார்களிலும் குற்றம் காண்பவரும் பெருமைப் படுத்துகிறவர்களும் காணப்படுகிருர்கள். ஆதலால் இக்கூற்றுக் குறுகிய நோக்கம் கொண்ட கூற்று என்றே கருதுகிறேன்!"

## இரு ஆராய்ச்சி முடிவுகள்

வித்துவான் வே. சு. சுப்பிரமணிய ஆச்சாரியார் 1947 ல் வெளியிட்ட தம் முதல் ஆராய்ச்சி நூலுக்குச் சிலப்பதிகார ஆராய்ச்சி என்ற பெயரே இட்டுருக்கிருர். அதற்கு ஆதாரங்கள் தந்த ஆராய்ச்சியாளரும் ஆதரித்து முன்னுரை தந்தவரும் இராவ் பகதூர் எஸ். வையாபுரிப் பிள்ளை. இரண்டாவது சிறு வெளியீடு, பெரியார் ஈ. வே. ரா. அவர்கள் ஆதரவு முன்னுரையுடன் 1951-ல் வெளிவந்தது. இரண்டு நூல்களின் வாத முடிவுகள் கீழே தரப்படுகின்றன.

'சிலப்பதிகாரமும் ஆரியக் கற்பனையும்' என்ற நூலின் முடிவு வருமாறு.

"இதுகாறும் கூறியவாற்ருல் சிலப்பதிகாரமும் திருக்குறளுக்கு இலக்கியமாகாது என்றும், அதில் தமிழ்ப் பண்பாடு இல்லை என்றும், சரித்திரப் பண்பாடு இல்லை என்றும், காவியப் பண்பாடு இல்லை என்றும் தடைவிடைகளால் நிரூபித்துள்ளேன்."

சிலப்பதிகார ஆராய்ச்சி தந்த முடிவு வருமாறு (166)

"எனவே சிலப்பதிகாரம் சங்க காலத்திய நூலன்று. சரித்திர சம்பந்தமுடையதன்று. கற்பனைக் கதையாகும் என்பது தோற்ருமல் போகாது.

முன் எழுதப்பட்ட ஆராய்ச்சி நூலில்,காலம்,வரலாற்றுப் பண்பு இரண்டுமே எதிர்க்கப்பட்டன. காவியப் பண்பு இழித்துரைக்கப் படவில்லை. பிந்திய நூலோ இதன் காவியப் பண்பு, தமிழ்ப் பண்பு மறுக்கப்படுகிறது. அது ஆரியப் பண்புடையது என்று இழித்துரைக்கப்படுகிறது.

## பழிப்பவர் புகழ்ச்சி

முந்திய நூல் சிலம்பின் காவியப் பண்டைப் பழிக்கவில்லை. குறை கூறவில்லை. அது மட்டுமோ? போற்றும் உலகையும் போற்றும் இராவ் பகதூரையும் தாண்டி நூலின் காவியப் பண்புக்குச் சிறப்பளிக்கிறது.

"இந்நூல் மிக மிக அழகாக யாக்கப் பெற்றிருக்கிறது. எனவே, இதனுசிரியர் மிகச் சிறந்தவராதல் வேண்டும். இவருக்குத் தெரியாத கலைகள் இல்லை. எல்லாம் வல்லுநர். சர்வகலா வல்லவர். அல்லது 96 வகைச் சாத்திரங்களிலும் வல்லவர் எனில் மிகப் பொருந்தும். மனேபாவத்தில் தோன்றிய கதையை மிகத் திறம்பட உரைத்து மெய்யாக்கியது ஆசிரியரின் வண்மையைத் தோற்றுவிக்கின்றதன்ருே ?" (பக் 31)

"ஒவ்வொரு பகுதியிலும்இலக்கியச் சுவை ததும்ப நின்றதென்பது எவரும் மறுக்கமுடியாத உண்மையாகும."-பக் 32)

"இந்நூலில் ஆசிரியர் காவிரி, வைகையாகிய ஆறுகளையும் புகார், மதுரை ஆகிய நகரங்களையும் சூரிய சந்திரர் உதயமும் அஸ்தமனமும் கொண்டற் காற்று, குடகாற்று, வாடைக் காற்று, தென்றல் என்ற நால் வகைக் காற்றுக்களையும் இந்நகரங்களைச் சூழ்ந்துள்ள காடுகளையும் வருணிப்பது படிப்போருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டு நேரில் தோன்றும் தோற்றம் போலக் காணப்படும். எந்த நூலாசிரியன் ஒருங்கே கூருத பல செய்திகளையும் இவர் கூறுகின்ருர். இவரால் கூத்து வகைகள், இசை வகைகள், யாழ் வகைகள், பொழில் விளையாட்டு, புனல் விளையாட்டு, பறவைகளின் ஒலி, கோள்மீன், நாள்மீன் இவற்றின் 'நிலைகளாலும் திரிதலாலும் உலகிற்கு ஏற்படும் நன்மை தீமைகள், மருந்து முறைகள், பல சமயங்களின் செய்திகள், பல புராணக் கதைகள், பல அரசர்கள் செய்தி, மலைகள், தெய்வங்கள் இன்னேரன்ன பல கூறப்பட்டிருக்கின்றன." (பக் 31-32)

"கண்ணகியினுடைய அவயவங்களும், நுதல், புருவம், இடை, கண், நடை, சொல் ஆகிய இவைகளை மனையறப் படுத்த காதையில் (வரி 37-39) கூறுவது மிகவும் வியத்தற்குரிய வருணனை ஆகும்." (பக் 32)

"நாடு நகரங்கள் மிகத் திறம்பட வருணிக்கப்பட்டிருக்கின்றன." (பக் 36)

"இவர் ஓரிடத்துச் சுருக்கிக் கூறும் செய்தியை மற்றுமோரிடத்தில் கூறும்போது படிப்போர்க்கு வெறுப்புத் தோன்ருதவாறு சுருக்கிக் கூறியுள்ளதைப்பெருக்கிக் கூறியும், விரித்துக் கூறிய ஒன்றைச் சுருக்கிக் கூறியும் சென்றுள்ளார்." (பக் 36-37)

"இசையளவில் வரிப்பாட்டுக்கள் படிப்போரையும் பக்கம் நின்று கேட்போரையும் விரித்துக்கொள்ளும் வனப்பு வாய்ந்தனவாக உள்ளன... இன்னும் இவர் கூறும் பல உருவகங்களுக்கு உவமைகளும் கற்போர் மனத்தைக் கவரக் கூடியவையாகும்." (பக் 37-38)





# வேலங்குடித் திருவிழா

கண்ணதாசன்

## 20

"அறிவு கெட்டவர்கள்! மனிதத் தன்மையே இல்லாத இவர்கள் வீட்டில் சம்மந்தம் செய்து கொள்ள வந்தோமே. நமக்கு இது வேண்டியதுதான். அப்பா, புறப்படுங்கள்! பெண்ணுக்கா பஞ்சம்? மாப்பிள்ளை இருக்கிருன் ஒரு வீட்டிலே என்று தெரிந்தால், அந்த வீட்டு வாசலிலே பெண்களைக் கொண்டு வந்து சந்தை போட்டுக் காட்டுவார்கள்." திருமண மாகாத பெண்கள் அவ்வளவு பேர் இருக்கிருர்கள் இந்த நாட்டில். வாருங்களப்பா! அம்மா புறப்படு! இந்திரா வாம்மா! பாலன் எழுந்திரு!" என்று ஆத்திரத்தோடு கத்தினன் சுந்தரம்

"நில்லுங்கள்!" என்று ஒரு குரல் கேட்டது. சாரதை முன்னல் வந்தாள். தன் தாயைப் பார்த்து, "உனக்கு அறிவு ஏதாவது இருக்கிறதா? வந்தவர்களை இப்படித்தான் அவமானப்படுத்துவதா? நீயா போய் வாழப் போகிருய்? நல்லதோ, கெட்டதோ அங்கு வாழவேண்டியவள் நான். மாப்பிள்ளையிடம் கோளாரு? சொல்லு! அவர் தங்கைக்கு வியாதி என்ருல் யாருக்கென்ன? ஏன், வியாதி என்ருல்தான் என்ன? நானும் நீயும் கல்லுப் பிள்ளையார் மாதிரியா இருந்துவிடப் போகிருேம்! நமக்கும் ஒருநாள் அது வந்தால்? அப்போது யாராவது இது மாதிரிப் பேசினல்... கொஞ்சமாவது புத்தி வேண்டும். இது என் கல்யாண விஷயம். நான் முடிவு செய்து கொள்கிறேன். நான் அந்த வீட்டில்தான் வாழ்க்கைப் படவேண்டும். அவருக்குத்தான் என்னை மணமுடிக்க வேண்டும். இல்லைஎன்ருல் என்சடலத்தைத்தான் நீங்கள் காண முடியும். மரியாதையாகப் பேசி முடியுங்கள்.'—என்று பொழிந்து முடித்தாள் சாரதை. அந்த இடம் மழை பெய்து ஓய்ந்ததுபோலிருந்தது. அவ்வளவு அமைதி.

சாரதையின் தாய் அங்கிருந்த ஒரு கைக்குழந்தையைத் தூக்கிக்கொண்டு ஒரு மூலையில் போய் உட்கார்ந்தாள். தந்தை தலைகுனிந்தபடி அங்கிருந்த வெற்றிலைப் பெட்டியில் தாளம்போட்டுக் கொண்டிருந்தார். அமைதியைக் கிழித்து சுந்தரத்தின் பேச்சுப் புறப்பட்டது:

"வேண்டாம். இவ்வளவு ரசாபாசத்திற்குப் பிறகு திருமணம் முடித்தால் பிறகு இந்த வீட்டில் காலடி எடுத்து வைப்பதற்கு யோக்கியதை இராது. மனம் கெட்ட பிறகு மணம் எப்படிச் சோபிக்கும்? எனக்கு இந்தச் சம்மந்தமே தேவையில்லை..."—சுந்தரம் பேசி முடிக்கவில்லை; "அண்ணு!" என அலறினுள் இந்திரா.

'அண்ணு, அப்படி எல்லாம் பேசாதே! திருமணத்திற்குச் சம்மதித்துவிடு. என்னைத்தானே சொன்ஞர்கள், ஏன் அண்ணு நீ பதறுகிருய்? இல்லாததையா சொல்லிவிட்டார்கள்! இவர்கள் சொல்லாவிட்டால் மற்றவர்கள் சொல்லுகிருர்கள். அதற்காக நான் கொஞ்சங்கூட வருத்தப் படவில்லை. சாரதைக்குத் தங்கமான குணம். மறுத்துப்பேசாதே அண்ணு! நான் கூடஇருந்தால் தானே வியாதிபற்றிய சர்ச்சை. நாளைக்கே அவரும் நானும் புறப்பட்டுப் போய் விடுகிருேம்..."—இந்திரா முடிக்கவில்லை. "இந்திரா!" என அலறினன் சுந்தரம்.

"பேசாமல் இரண்ணு! எதையும் பேசிக் காரியத்தைக் கெடுக்காதே" என்று கூறிவிட்டு, சின்னப்பரைப் பார்த்து, "அப்பா" பேசி முடித்துக்கொள்ளுங்கள்" என்ருள் இந்திரா. அதைத் தொடர்ந்து சாரதை தன் தந்தையைப் பார்த்து "இம்! முடித்துக்கொள்ளுங்கள்! ஏன் வாயை மூடிக் கொண் டிருக்கிறீர்கள்?" என்ருள்.

இந்திராவுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. "ஒரு பெண்ணுக்கா இவ்வளவு துணிவு? பெண்கள் இப்படியும் பேச முடியுமா? தனது திருமணப் பேச்சு நடக்கிறதென்ருல் அப்பாதெல்லாம் அடைத்த கதவைத் திறக்காமல் அறைக்குள்ளேயே கிடப்பார்களே இந்த நாட்டுப்பெண்கள்! சாரதையும் அப்படித்தானே இருந்தாள் கொஞ்ச நேரத்திற்கு முன்பு. சரிதான். தவறுகளைக் கண்டிக்கும்போது படித்தபெண்களுக்குஅசாத்தியத் துணிச்சல் வரும்போலிருக்கிறது" என்று எண்ணி எண்ணி அதிசயித்தாள்.

பெண்ணின் தந்தையும் சின்னப்பரும் வாய்மூடி மௌனிகளாக வெற்றிலை மாற்றிக் கொண்டார்கள். இந்திராவின் கண்களிலே ஆனந்தக் கண்ணீர் வடிந்தது. சுந்தரம் மெதுவாக அவள் அருகில் வந்து "உனக்காகத்தான் நான் இந்தத் திருமணத்திற்குச் சம்மதிக்கிறேன். உன்னை அவமானப்படுத்திய வீட்டில் எனக்கென்ன சம்மந்தம் வேண்டிக் கிடக்கிறது!" என்ருன்.

"அதெல்லாம் சொல்லாதே அண்ணு. இப்படிப்பட்ட பெண்ணை இனி எங்கே பார்க்கப் போகிருேம். சாரதையை உனக்குக் கட்டி வைப்பதற்காக இப்படி ஆயிரம் அவமானங்கள் வந்தாலும் நான் தாங்கிக்கொள்வேன். இப்பொழுது பேச்சு முடிந்துவிட்டது. இனி, நடந்து போன எதையும் நினைக்காதே! நீயும் சாரதையும் சந்தோஷமாக வாழ்ந்தால் அதுதான் எனக்கு நிம்மதி" என்ருள் இந்திரா.

சுந்தரத்தின் கண்கள் கட்டுப்பாடில்லாமல் கண்ணீர் வடித்தன. "இருதயத்திலே அணுவளவும் களங்கமில்லாத பெண்களுக்குமேல் ஒரு தெய்வம் உலகத்தில் ஏது? நடமாடும் பொற்சிலைகள். குழந்தையின் பிஞ்சு இதயமும், இயற்கையின் குளிர்ந்த காட்சியும் மேகத்தின் கருணையும் ஒன்று திரண்டு வந்ததுபோல் நல்ல பெண்கள் காட்சியளிக்கிருர்கள். தொல்லைகளிலே கால் கைகளை மாட்டிக்கொண்டு கூப்பாடு போடும் மனிதனுக்கு நல்ல மனைவிதான் விடுதலைத் தாய். வெளி உலகத்தின் ஆசாபாசங்களுக்கும் கோபதாபங்களுக்கும் ஆளாகி, ஆளாகி, பொருமைப் பார்வையிலே விழுந்து விழுந்து, சூழ்ச்சிக்காரர்களின் கைகளிலே துவண்டு துவண்டு அக்கிரமக்காரர்களின் பின்புறத் தாக்குதலுக்கு இரையாகி நொந்த மேனியோடும், வெந்த உள்ளத்தோடும் இல்லறச் செல்வி ஆட்சி நடத்தும் வீட்டு உலகத்திற்குள் நுழையும்போது, களைப்புப்பறந்துபோகிறது;களிப்புக்கூத்தாடுகிறது. பஞ்சணையில் சாய்ந்தபடி இருந்து, மார்பிலே மனையாளை அணைத்துக்கொண்டு மனித மனங்களின் சிக்கல்களையும், பின்னல்களையும் தத்துவ ரீதியிலே வேடிக்கையாக விமர்சனம் செய்தபடி, பத்து வார்த்தைகளுக்கு ஒரு முத்தம் வீதம் பெற்றுக்கொண்டு பல நாட்கள் அப்படியே இருந்தாலும் பசி எடுக்காது, பட்டினி தோன்ருது"-இப்படி நினைத்த சுந்தரம், "பாலன் பெருமைக்குரியவன். காரணம், தன் தங்கை அவனுக்குக் கிடைத்திருக்கிருள்." என்றும் பெருமைப்பட்டுக் கொண்டான்.

அன்றையிலிருந்து ஏழாவது நாள் திருமணம் என்று முடிவு செய்துகொண்டு சின்னப்பரின் குடும்பம் புதுக்கோட்டைகுப் புறப்பட்டது. அவர்கள் வார்த்தையைத் தட்ட முடியாமல் சொக்கப்பரும் புதுக்கோட்டைக்கு வந்து சேர்ந்தார். கோட்டையூரில் மணப்பெண் சாரதை மகிழ்ச்சியில் திளைத்திருந்தாள்.

## 13

### தியாகப்படலம்

பெண்மை வாழ்கெனக்
கூத்திடுவோமடா
பெண்மை வெல்கெனக்
கூத்திடுவோமடா
—பாரதி

கோட்டையூரில் நடந்த சம்பவத்தை இந்திரா முழுக்க மறந்துவிட்டாள். அப்படி ஒரு அவமானம் தனக்கு நேர்ந்ததாக கருதவே அவள் தயாராயில்லை. "அண்ணனுக்கு வரப்போகும் மனைவி நம் குடும்பத்திற்கு ஏற்றவள். அண்ணனையும் அவளையும்

பக்கத்தில் நிறுத்தி வைத்தால் ஊரிலே எல்லோரும் கண்டு பொறுமைப்படுவார்கள். அவ்வளவு அழகாக இருக்கும்.'' வரப்போகும் அண்ணியின் கைகளுக்கு வளையல் வாங்குவதிலே இருந்து, ரிப்பன் வாங்குவது வரை இந்திரா, தானே கவனித்தாள். ஆனால் பாலன் மட்டும் முழுக்க அமைதி இழந்துவிட்டான். ''தொட்டுத் தழுவி சுகம் பெற முடியாமல், குடும்பம் என்ன வேண்டிக் கிடக்கிறது குடும்பம்! எவ்வளவுதான் நாமே தியாகம் செய்துகொண்டிருக்கமுடியும்! வாழவேண்டிய வயதில் இப்படியே அவதிப்பட்டால் இனி எப்போதுதான் வாழ்வது?'' என்ற எண்ணத்தில் இறங்கிவிட்டான் பாலன். தனியாக உட்கார்ந்திருக்கும் போதெல்லாம் அழகான பெண்ணொருத்தி தன் மனைவியாவது போலவும், அவளுடனேயே உல்லாசமாகச் சுற்றுவதுபோலவும் அவள் தன்னிடம்உயிரையே வைத்திருப்பது போலவும் குழந்தையைக் கொஞ்சுவதுபோலத் தன்னைக் கொஞ்சுவதாகவும், அவள் கமலத்தைப்போல இருப்பதாகவும் கற்பனை செய்து மகிழ ஆரம்பித்தான். கல்யாண ஏற்பாடுகளின் சுறுசுறுப்பு அவன் கவனத்தைக் கவரவில்லை. ஆனால் அதிலே கமலம் கொண்ட ஈடுபாடுதான் அவன் கண்ணுக்கு விருந்தாய் அமைந்தது.

கமலம்!-பருவத்தின் முதற்படியில் நிற்கின்ற அழகுச்சிலை. பாலனின் கண்கள் அவளையே வட்டமிட்டன. பாலனின் நெஞ்சிலே அவள் அழகு போதை வெறியூட்டிற்று. அவள் குதிக்கும்போது அவளது அங்கமெல்லாம் குதிப்பதைக் கண்டு மகிழ்ந்தான். மைத்துனியைக் கேலி செய்யும் பாணியில் கொஞ்சம் கொஞ்சமாகக் காதல் வார்த்தைகளையேவிட ஆரம்பித்தான். அவன் முற்றிலுமே மாறிவிட்டான். தன் அக்காள் கணவன் என்கிற அளவில்தான் அவள் அவனை மதித்தாள். அத்தான் என்பதால் கேலியிலே பங்கு கொண்டாள். அவனுடைய இருதயத்திலே பொங்கிக்கொண்டிருந்த எண்ணங்களில் ஒரு துளியைக்கூட அவள் அறிய மாட்டாள். தன்னிடத்திலே தவறான எண்ணம் இனி அவனுக்கு வராது என்று நம்பினாள்.

ஆனால், பாலனின் உள்ளம் சொல்லும் கதையெல்லாம் எழுத்துப் பிசகாமல் ஒருத்திக்கு மட்டும் புரிந்தது. திருமண வேலைகளோடு வேலையாக இந்தக் கதையையும் ஜாடையாகக் கவனித்தாள் அவள். காலையில் ஒரு ஆடை, மாலையில் ஒரு ஆடை என்று மாற்றி மாற்றி அணிந்து, பவுடர் பூசுவதும், ஸ்னோ தடவுவதுமான ஆண்களுக்குத் தேவையில்லாத அலங்காரங்களில் ஈடுபட்டு தலையை நடு வகிடு எடுத்து வாரி கண்ணாடிக்குமுன் நின்று கால்மணி நேரம் அழகு பார்க்கும் வேலையில் திடீரென்று இறங்கியிருந்த பாலனை வேவு பார்த்து மிகச் சுலபத்திலே புரிந்துகொண்டது அந்த ஒருத்தியின் இதயம்.

இருக்காதா பின்னே! அட்டக்கரி போன்ற நிறம். அதிலேயும் பெருவியாதி. கட்டப்பட்ட தாலியோ ஏமாற்றிப் பெற்றது. எத்தனை நாளைக்கு இதயத்தைக் காட்டி அன்பைப் பெறமுடியும்!- இந்திரா இந்தக் கணக்குக்கு வந்தாள். கமலத்தின்மீது பாலன் ஆசை வைத்திருப்பது தவறில்லை என்ற முடிவுக்கே வந்தாள். அதனால் பாலனும் மற்றவர்களும் சாப்பிட உட்காரும்போதெல்லாம் இந்திரா கமலத்தைப் பார்த்து. ''கமலம் நீ போய்ப் பரிமாறு. சமயற்காரனுக்கு இங்கே வேலை இருக்கிறது.'' என்று பாலனுக்குக் கேட்கும்படி சொல்ல ஆரம்பித்தாள். கமலம் பரிமாறுவதையும் பாலன் சாப்பிடுவதையும் கொஞ்சம் தூரத்தில் நின்றபடியே கவனிக்கவும் தொடங்கினாள். ''காபியிலே உப்பு! பச்சடியில் சர்க்கரை! சோற்றிலே சுண்ணாம்பு! ஏது கமலத்தின் சமயலா? தெரிகிறதே'' என்பான் பாலன்.

கமலம் தூணுக்குப் பின்புறம் முகத்தைப் பதித்துக்கொண்டு சிரிப்பாள். பாலன் நிறையச் சாப்பிட்டுவிட்ட பிறகும், ''சாப்பிடுங்கள்! சாப்பிடுங்கள்'' என்று எதையாவது எடுத்து வைப்பாள் கமலம். ''போதும் போதும்'' என்று தடுக்க முயலும் சில சமயங்களில் அவள் கைகளையே பிடித்து விடுவான். சாதாரணமாகத் தொடுவது போல பார்ப்பவர்களுக்குத் தெரியும். அதன் உள்ளடங்கிய இலட்சியத்தை பாலனின் நெஞ்சு அறியும். தூரத்தில் நின்று பார்க்கும் இந்திராவுக்கும் இது புரியும். கமலத்தோடு தான் விளையாடுவதற்கு இந்திரா குறுக்கே நிற்கவில்லை என்பதைத் தெரிந்து கொண்ட பாலன், அதற்காக இந்திராவிடம் அன்பு பாராட்டினான். அதனால் தான் அன்பு பாராட்டுகிறான் என்பதை உணர்ந்துகொண்ட இந்திரா, கமலத்தோடு பேசுவதற்கு அதிகமான சந்தர்ப்பங்களை அவனுக்கு உண்டாக்கித் தந்தாள். அப்படித் தருகிறாள் என்பதை நன்றாகக் கண்டு கொண்ட பாலன் இந்திராவிடத்தில் வைத்த அன்பை அதிகமாக்கிக் கொண்டான். இந்த முக்கோண வடிவ நாடகத்தில் தன் நினைவு இல்லாமல் நடமாடியவள் கமலம் ஒருத்திதான்.

சுந்தரத்தின் திருமணத்திற்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்தன. அவர்கள் வீடு களை கட்டிக்கொண்டிருந்தது. பாலன் மாடியிலே உட்கார்ந்து படிப்பவன்போல் பாசாங்கு செய்து கொண்டிருந்தான். காப்பியோடு உள்ளே நுழைந்தாள் கமலம். ''காபி!'' என்றாள். வேண்டுமென்றே அவன் பேசாமலிருந்தான்.

''காபியைக் குடித்துவிட்டும் படிக்கமுடியும் என்பதை நினைவுப்படுத்த விரும்புகிறேன்'' என்றாள் கமலம் கேலியாக.

புத்தகத்தை மூடிவிட்டு நிமிர்ந்த பாலன் இடது கையால் காபியை வாங்கியபடி வலது கையால் அவளது கையைப் பிடித்துவிட்டான். பதறிப்போய் ''அம்மாடி!'' என்று கதறி, கையை விடுவித்துக்கொள்ள முயன்றாள் கமலம். திணறினாள்; திமிறினாள். ''விடுங்க அத்தான், விடுங்க அத்தான்!', என்று சத்தமில்லாமலே கத்தினாள். வேறு வழியின்றி அவள் கையை விடுவித்த பாலன் திரும்பிப் பார்த்தபோது அங்கே இந்திரா நின்றாள். கமலம் பயந்துபோய்க் கண்ணீர் வடித்துவிட்டாள். கீழே ஓடப்போனவள் அக்காளைப் பார்த்தபடியே நின்றுவிட்டாள். ஒரு வார்த்தைகூடப் பேசாமல் இந்திரா அவளை அணைத்தபடியே கீழே இறங்கினாள். கீழே, ஒரு பர்மாப் பாயில் சின்னப்பரும் மங்கையர்க்கரசியும் உட்கார்ந்து வெற்றிலை போட்டபடி உலக விவகாரங்களைப் பற்றி மும்முரமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களைக் கவனிக்காதவள் போல் பின்புறத் தோட்டத்திற்கு கமலத்தைக் கூட்டிக்கொண்டு போனாள் இந்திரா. தோட்டத்தின் வடக்கு மூலையிலே ஒரு கிணறு. அந்தக் கிணற்றின் அருகிலே துணி துவைப்பதற்காகப் போடப்பட்ட ஒரு கல். அந்தக் கல்லிலே தான் உட்கார்ந்துகொண்டு, தங்கையை அருகில் அழைத்து தட்டிக் கொடுத்தாள் இந்திரா.

''அழாதே கமலம்! ஏன் அழுகிறாய்? நான் முன்மாதிரி இல்லை இப்போது. முன்பு நான் கோபித்துக்கொள்வேன். இப்போது கோபிக்கமாட்டேன். நான்முன்பு கருப்பாக மட்டும் தானிருந்தேன். இப்போது அப்படியில்லை. பார்க்கிறாயல்லவா.'' என்றாள். கமலம் பதில் சொல்லவில்லை. அழுதபடியே நின்றாள்.

''கமலம், ஒரு நல்ல காரியத்திற்காகக் கேட்கிறேன். நன்றாக முடிவுசெய்துதான் கேட்கிறேன். பயப்படாமல், கூச்சப்படாமல் பதில் சொல்.'' என்றாள் இந்திரா. அவள் என்ன கேட்கப்போகிறாளோ என்று திகைத்தபடி நின்றாள் கமலம்.

தொடரும்

-மீனு-

# வானொலியில்

## கண்ணதாசன்

19-3-56 பகல் 12 மணிக்கு மதருஸ் 2 லிருந்து வானொலியில் பேசுவார்,





# பண்பு கெட்ட கதாபாத்திரங்கள்!

**ஈரோட்டான்**

பாகம் வேண்டுமெனப் போராடும் பாண்டவர்கள், பழிபோக்கிக் கொள்ள முயலும் பாஞ்சாலி, கருதியதையெல்லாம் முடிக்கவல்ல கண்ணன், துச்சமெனப் பகைவரை மதிக்கும் துரியன், நட்பிற்கும், கொடைக்கும் நாயகமான கர்ணன், சாதுரியத்தில் மிக்க சகுனி இன்னோரன்ன பலரும் பங்கு பெறும் கதை தான் பாரதக்கதை. பாரதக்கதை, பண்டை ஆரியர்களின் பழக்க வழக்கங்களைக் கூற வந்ததோர் பழங்கதை, அன்னாரின் கலாச்சாரத்தைத் தெரிவிக்க வந்ததோர் கற்பனைக்கதை என்று கூறப்படுமானால் அக்கூற்றைப் பற்றி யாருக்குத்தான் என்ன கவலை? அவ்வாறின்றி மாபாரதம் மக்கட்கு மாண்புறு கருத்துக்களைப் போதிக்க வந்த புனித நூல், உயரிய தத்துவங்களை உணர்த்த வந்த உயரிய நூல், சீரிய அறவுரைகளைச் செப்ப வந்த சிறப்பு மிக்க நூல் என்றிவ்வாறு இல்லாத பெருமையெல்லாம் அந்நூலுக்கு இருப்பதாகக் கற்பித்துக் கூறப்படும் பொழுது தான் நம் போன்ற நடு நிலைமையாளர்க்கு அது வேதனை அளிக்கிறது, வெறுப்புத் தருகிறது.

பாரதக் கதையைப் பகுத்தறிவு கொண்டு ஆராய்ந்து பார்த்தால் அதிலே காணப்படுவதெல்லாம் அர்த்தமற்ற,அறிவிற்குப் பொருத்தயடைய, அந்த நேரமே ஏதாவது ஒரு பெண்ணைப் புணர்ந்து மக வொன்றை ஈன்றெடுத்தல் வேண்டும் என்ற நியதிக்குரியவராய் பராசரர் இருந்த காரணத்தால், தன் கருத்தை மச்சகந்தியிடம்கூறி, முன்னர் அதற்கு உடன்படாதவளைப் பின்னர் உடன்படச் செய்து, அப்பொழுது புணர்வதற்கு ஏற்ற பருவமற்றிருந்தவளை உடனே புணர்ச்சிக்குரிய பருவத்தளாக்கி, அவள் உடல்மீது வீசிய மச்சகந்தம் என்னும் வாடையைப் போக்கி அதற்குப் பதிலாக பரிமளகந்தம் வீசச் செய்து, புணர்வதற்கு ஏற்ற இடமாக யமுனையாற்றின் இடையிலே ஒரு திட்டை உண்டாக்கி, அதிலே ஒரு கை மண்ணெடுத்து ஆகாயத்தை நோக்கி ஊதி அதைப் புகையாக மாறச் செய்து சூரியனை மறைத்து, புணர்வதற்குரிய இரவு நேரத்தை உண்டாக்கி மச்சகந்தியைப் புணர்ந்து மூன்றேமுக்கால் நாழிகைக்குள் வேதவியாசர் என்னும் மகவைத் தோன்றச் செய்து உடனே அவளைவிட்டுப் பிரிந்தார். அவ்வாறு பிரியும்போது ''பெண்ணே இது விஷயம் யாருக்காவது தெரியுமோ என்று அஞ்ச வேண்டாம். இது யாவர்க்கும் தெரியாது. பிறனொருவனுக்கு நீ மனைவியாகும் வரையில் இத்தகைய கன்னிப்பருவத்தளாகவே இருப்பாய்'' என்று கூறிப் பிரிந்தார். அவர் மகனாகிய வேதவியாசர் பிறக்கும்போதே மான்தோல், காவியுடை போன்றவற்றுடன்பிறந்வோ யாமறியோம். [நல்லாப் பிள்ளை பாரதம். ஆதிபர்வம். வேத வியாசர் உற்பவச்சர்க்கம்.]

வேத வியாசர் பிறப்புதான் இப்படியென்றால் அவருடைய தாயாகிய மச்சகந்தியின் பிறப்பு அதனினும் வியப்புடையது. வேட்டைக்குச் சென்ற வசுராஜன் களைப்பு மிக்கவனாய் தனக்கென அமைக்கப் பட்டிருந்த கூடாரத்திலே சென்று படுத்தவன் உறங்கிவிட்டான். தூக்கத்திலே தன மனைவி தன்னைக் கூடுவதாகக் கனவு கண்டதால் இந்திரியம் வெளியாகவே அவன் துயிலினின்றும் எழுந்து அவ்விந்தை வீணாக்குதல் பாவமென்று கருதியதால், அதையோர் இலையில் வைத்து மேலே பறந்து சென்ற இராஜாளியிடம் கொடுத்து பத்திரமாக அதைத் தன் மனைவியிடம் சேர்த்து அருந்திவிடுமாறு சொல்லிவா என்றதை அனுப்பினான். அவ்வாறு ஆகாயத்தில் சென்ற இராஜாளி வல்லூறொன்றால் தாக்கப்படவே, இராஜாளி வைத்திருந்த இலையானது கிழிய,அதிலே இருந்த இந்திரியமெல்லாம் யமுனையாற்றில் சிந்தியது. அதை ஓர்மீன் அருந்தி கருவுற்றது. செம்படவர் வீசிய வலையிலே அம்மீனானது அகப்படவே, அம்மீனை அவர்கள் தாசராசனிடம் கொடுத்தார்கள். அவன் அம்மீனின் வயிற்றைக் கிழித்தபொழுது அதன் வயிற்றிலே ஒரு பெண் குழந்தையும் ஆண் குழந்தையும் இருக்கக் கண்டு மகிழ்ந்தவனாய் பெண்குழந்தையை குலத்திலே சந்தனு அரசனாகத் தோன்றலானான்.

வாசகர்கள் இவ்விடத்திலே கவனிக்க வேண்டிய ஒருண்மையுண்டு. கங்கையின் உறுப்பை வர்ணன் கண்டதற்காக அவன் பிரமனால் பூவுலகில் மனிதனாகப் படைக்கப்பட்டான். நாம் கேட்கிறோம்; கங்கையின் உறுப்பை வர்ணன் பார்த்தானென்று பிரமனுக்கு எப்படித் தெரியும்? அப்பிரமனும் கங்கையின் உறுப்பை வர்ணன் பார்த்தபொழுது தானும் பார்த்திராவிட்டால்? இதனால் தெரிய வருகின்ற உண்மை என்னவென்றால் பிரமனும் கங்கையின் உறுப்பைப் பார்த்தான் என்பது தான். ஆனால் தண்டனைக்குள்ளானவன் வர்ணன்தான். பலரும் கூடியிருக்கிற அவையிலே ஒரு பெண்ணின் ஆடையை அகற்றுகின்ற அளவிற்கு தேவர்களின் ஒழுக்கம் உயர்ந்திருக்கின்றது! ஆடையற்ற பெண்ணுறுப்பைப் பார்த்து மகிழ்கின்ற அளவிற்கு தேவர்களின் அறிவு முன்னேறியிருக்கிறது! இத்தகைய இழிகுணம் படைத்த தேவர்கள் மக்களினும் மேலாக எவ்வாறு மதிக்கப்பட உரியவராவர். இதனாலன்றோ வள்ளுவப் பெருந்தகையாரும் இத்தேவர்களைப் பற்றிக் கூறும்பொழுது ''தேவரேயனையர் கயவர்'' என்று இரத்தினச் சுருக்கமாகக் கூறிச் சென்றார். கயவரினும் கடைப்பட்டவர்கள் தேவர்கள் என்றால் அதிலொன்றும் வியப்பில்லையே?

பதவியிலிருந்து துறத்தப்பட்டவர்கள்கூட பாரதத்தை வைத்துக்கொண்டு காலட்சேபம் நடத்தும் காலம் இது. அந்தக் கதையில் நீதியுண்டா, நேர்மையுண்டா? இதோ, இங்கே பேராசிரியர் ஈரோட்டான் அவர்கள், பாரதக் கதையில் வரும் பாத்திரங்களின் 'குணவிசேட'ங்களை எடைபோட்டுக் காட்டியிருக்கிறார்கள். இந்தக் கட்டுரையை விருப்பு, வெறுப்பின்றி நடுநிலையினின்று யார் படித்தாலும், பாரதம், காமக்கிடங்கு, சாம்பலாக்கவேண்டிய குஷ்டரோகியின் பிணத்திற்குச் சமம் என்ற முடிவுக்குத்தான் வருவர்.

—ஆ-ர்.

மற்ற ஆபாசக் கருத்துக்களும், அநாகரிகச் செயல்களும்தான். தமிழினத்தார் தங்கள் உயிரினும் மேலாக மதிக்கின்ற கற்பு, மானம் போன்ற நற்பண்புகள் பாரதக்கதையிலே பாழ்படுத்தப்படுகின்றன. அடுத்துக் கெடுத்தல், சூழ்ச்சி, வஞ்சனை போன்றவைகள் எவ்வளவுக்குத் தீப்பண்புகளாக மனித சமுதாயத்தால் வெறுக்கப்படுகின்றனவோ,அவ்வளவும் மேலானவைகளாக, பாரோர்க்கு நீதி புகட்ட வந்ததாகக் கருதப்படுகின்ற பாரதக் கதையிலே பாராட்டப்படுகின்றன. ஆபாசத்திலே தொடங்குகிற இவ்வைந்தாம் வேதம் அநாகரிகத்திலே முடிவடைகின்றது. நற்கருத்துக்களைப் பரப்ப வந்ததாகப் பாராட்டப்படும் இந்நூல் உண்மையாகவே நச்சுக் கருத்துக்களை நடமாடும் மனித சமுதாயத்திடையே நாளும் பெருக்கி நலிவினை உண்டாக்குகிறது. பண்பிழந்த இப்பாரதக் கதையை மாபாரதம் என்றழைப்பதினும் மாபாதகம் என்றழைப்போமானால் அதனால் வருகின்ற இழுக்குதான் என்னையோ? அவ்வளவுக்கு என்? பாரதத்தையுண்டாக்கிய வேதவியாசர் பிறப்பை நோக்குங்கள். அதுவே ஒரு வேடிக்கை நிரம்பியதாக இருக்கின்றது. பராசரர் என்ற முனிவரை தாசராசன் மகளாகிய மச்சகந்தி என்பவள் தன் படகிலே ஏற்றிக் கொண்டு யமுனையாற்றைக் கடக்கும் போது விண்ணிலேயுள்ள இருபத்தேழு நட்சத்திரங்களுள் குறிப்பிட்ட ஒரு நட்சத்திரம் உச்சத்தை அடைந்ததை பராசரர் எப்படி கண்டார் போன்ற இவ்வினாக்களுக்கு விடைதான் என்ன தாரம். சிதறிக்கிடந்த வேதங்களை ஒழுங்காக்கி அவைகளை முறையே இருக்கு, யசுர், சாமம், அதர்வனம் போன்ற நான்கு பருப்புகளாகப் பாகுபாடு செய்தலால் இவர்க்கு வேத வியாசர் என்ற பெயர் உண்டாயிற்று. இவரும் தன் தாயை விட்டுப் பிரிந்து தன் தந்தையுடனே சென்றுவிட்டார். அவ்வாறு தன் தாயை விட்டுத் தான் பிரியும்போது அவளை நோக்கி ''என் தாயே நான் பிரிந்து செல்வுதற்காக நீ வருந்த வேண்டாம். எந்த சமயத்தில் நீ என்னை விரும்பி அழைக்கிறாயோ அந்த சமயத்தில் நான் உன்னை அடைந்து உன் விருப்பத்தை நிறைவேற்றுவேன்'' என்று கூறிப் பிரிந்தார்.

அன்பர்களே, பராசரர் பாடுபட்டு ஈட்டிய தவவன்மை எத்தகைய நற்காரியத்திற்குப் பயன்பட்டிருக்கின்றது பார்த்தீர்களா? பகுத்தறிவு உலகிலே பத்து மாதத்தில் குழந்தைகள் யாவும் பிறக்க, பராசரர் ஆற்றலிலே மூன்றேமுக்கால் நாழிகைக்குள் குழந்தை பிறப்பதென்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. அதனினும் பேராச்சரியம் என்னவென்றால் பிறக்கும்பொழுதே வேதவியாசர் மான் தோலுடனும், காவியுடையுடனும் பிறந்தார் என்பது தான். சூரியன் ஒளிவீசும் பகற்காலத்திலே விண்மீன் எவ்வாறு தோற்றமளிக்க முடியும்? ஒரு விண்மீன் உச்சத்தை அடைந்ததை பராசரர் எப்படி கண்டார் போன்ற இவ்வினாக்களுக்கு விடைதான் என்ன மச்சகந்தி என்ற பெயருடன் தானே வளர்த்துவர, ஆண் குழந்தையை வசுராஜனுக்குக் கொடுத்து விட்டான். இந்த மச்சகந்திதான் பின்னர் சந்தனு என்னும் மன்னனை மணந்து பாண்டவர்க்குப் பாட்டியாகப் போகிறாள். இவளுக்கு மணமாவதற்கு முன்பே பராசரரால் வேதவியாசர் என்றொரு புத்திரன் தோன்றினான். இதுமச்சகந்தியின் கற்பு மேன்மை!

சந்தனுவின் இரண்டாம் மனைவியான மச்சகந்தியின் கற்பு இவ்வாறிருக்க, அவனுடைய முதல் மனைவியாகிய கங்காதேவியைப் பற்றி சிறிது அறியலாம். தேவ சபையில் பிரமன், இந்திரன், வர்ணன், அக்கினி, எமன் குபேரன். போன்ற பலர் வீற்றிருக்கும்போது கங்கையானவள் அச்சபையிலே வந்துகொண்டிருந்தாள். வாயுவின் குறும்புச் செயலால் கங்கையின் உடல்மேல் இருந்த ஆடை அகற்றப்பட்டது. கங்கையின் உடலுறுப்பைக் காண விரும்பாத தேவர்கள் யாவரும் கண்மூடி தலை கவிழ்ந்தனர். ஆனால் வர்ணன் மட்டும் அவ்வாறின்றி கங்கையின் உடலுறுப்பைத் தன் கண்ணாரக் கண்டான், இதையறிந்த பிரமன் வர்ணனின் அற்பச் செயலுக்காக அவனைப் பூவுலகில் மனிதனாகப் பிறக்கச் சாபமிட்டார். அவனுடைய காதலுக்கு உரியவளாகிய காரணத்தினால் கங்கையும் அவனுடைய காதலியாக பூவுலகில் படைக்கப்பட்டாள். அவ்வர்ணனே சந்திர மாபாரதம் மக்கட்குக் கற்பிக்கும் நீதியைப் பார்த்தீர்களா? சந்தனுவை மணந்த கங்கை தனக்குப் பிறந்த எட்டு குழந்தைகளில் எழு குழந்தைகளை ஆற்றிலே எறிந்து கொன்றுவிடுகிறாள். என்னே தாயன்பு! பச்சிளங் குழந்தைகளைப் பதைக்கப் பதைக்கக் கொன்ற அவ்வுயரிய தாயன்பை பாரதக் கதையிலன்றி வேறெங்கே காண முடியும்?

''பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற''

என்று கூறப்படும் தமிழர் பண்பாடெங்கே? ஈன்ற குழந்தைகளை இரக்கமின்றி ஆற்றிலே எறிந்து கொல்லும் ஆரியப் பண்பாடெங்கே? சேயைக் கொல்லும் தாயைக் காணலாம் பாரதக் கதையிலே, சேயைக் காக்கும் தாயைக் காணலாம் செழுந்தமிழ்க் காவியத்திலே! பண்பும், அன்புமிழந்த இத்தகைய பாரதக் கதையைப் பார் வாழ் மக்கள் ஐந்தாம் வேதமெனப் போற்றவேண்டுமாம்? அதைவிட ஆலகால நஞ்சை அமிழ்தெனச் சொல்லி அருந்தச் செய்யலாமே!

இனி பாண்டுவும், திருதராஷ்டிரனும் பிறந்த வரலாற்றை நோக்குங்கள். அம்பிகை, அம்பாலிகையென்ற தன்னிரு மனைவியரையும்விட்டு சித்திரவீரியன் விண்ணுலகடைந்தான். அவனுக்குப் பின் அவன் நாட்டையாள சந்தி

இல்லாமையால் சித்திரவீரியனுடைய தாயாகிய பரிமளகந்தி பீஷ்மரை நோக்கி "புத்திரப் பேறற்றவர்கள் அப்பேற்றைப்பெறப் பிறரைக் கூடுவது குற்றமாகாது என்று வேதம் கூறுவதால் நீயே சித்திரவீரியன் மனைவியரைப் புணர்ந்து புத்திரரை உண்டாக்குவாயாக" என்று கேட்க, பீஷ்மர் அதற்கு மறுக்க, அவ்வம்மையார் தன் கடந்த கால மங்கைப்பருவ நிகழ்ச்சிகளை எண்ணியவராய் உடனே தன் மகனாகிய வேதவியாசரை இங்கு அழைக்க அவரும் வந்தார். வேதவியாசரிடம் பரிமளகந்தி தான் எண்ணியதையெல்லாம் கூறவே, அவரும் அம்பிகைக்கும், அம்பாலிகைக்கும் புத்திரப்பேறு தருவதாக ஒப்புக்கொண்டார். முதலிலே வேதவியாசரைக்கூடச் சென்ற அம்பிகை அம்முனிவரின் மெலிந்த உடலையும், தாடி மீசையையும் வியர்வை நாற்றத்தையும் காண சகியாதவளாய் அவர் தன்னைப் புணரும்போது தன் கண்களை இறுக மூடிக்கொண்டாள். முனிவரின் புணர்ச்சிக் காலத்திலே இவள் கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தபடியால் இவளுக்குப் பிறந்த திருதராட்டிரன் பிறவிக் குருடனானான்.

இரண்டாவதாக இவரைக்கூடச் சென்ற அம்பாலிகை இவரைக் கண்டு அஞ்சியவளாய், உடல் வியர்த்து, நடுக்கமுற்று போர்வையால் தன்னுடலை மூடிக்கொண்டாள். முனிவரின் புணர்ச்சிக்காலத்திலே இவள் இவ்வாறு தன்னுடலை மறைத்துக்கொண்டு படுத்திருந்தால் இவளுக்குப் பிறந்த பாண்டு என்பான் பிறவியிலேயே வெள்ளை நிறமுடைய பாண்டுரோகத்திற்காளானான். எனவே இவன் பாண்டுவெனவும் பெயரும் பெற்றான். இவ்வாறு திருதராட்டிரனும், பாண்டுவும் தோன்றினார்கள். இளையவன் மனைவியரைக் கூடுமாறு மூத்தவனுக்கு ஆணையிடும் அதிசய அன்னையை இம்மா பாரதத்திலே தான் கண்டோம். மணமாகும் முன்னே, தான் கற்பிழந்த இழிதன்மையை ஒரு சிறிதும் நாணம், மானமின்றி தன் மகனிடம் ஒரு தாய் கூறும் விந்தையை இப் பாரதக் கதையிலன்றி வேறெந்த நூலில் யாம் காணமுடியும்.

தங்கள் உயிரினும் மேலாகக் கற்பை மதித்து வாழ்ந்த கண்ணகி, மாதவி, கோப்பெருந்தேவி போன்ற மங்கையர் குல திலகங்களின் பெருமையினையும், கற்பைப் பற்றிக் கவலையுறாது கடையான வாழ்வு வாழக் கருதிய குந்தி, பரிமளகந்தி, அம்பாலிகை போன்றவர்களின் சிறுமையினையும் அன்பர்களே நீங்கள் ஆய்ந்து பாருங்கள். சிந்தனையிலே வைத்துச் சீர்தூக்கிப் பாருங்கள். அதனால் சிறந்ததொரு முடிவுக்கு வாருங்கள். முன்னவர்களைப் பெற்றெடுத்த பெண்குலந்தான் பின்னவர்களையும் பெற்றெடுத்திருக்கிறது! என் செய்வது? நற்சோலையிலே நச்சு மரங்கள் தோன்றுமலா இருக்கின்றன?

பாண்டுவின் பிறப்பு தான் இவ்வாறென்றால் பாண்டவர்களின் பிறப்பு இதனினும் இழிவுடைத்தாக இருக்கின்றது. அம்பிகையும் அம்பாலிகையுமாவது தங்களின் கணவன் இறந்த பின்பு மாற்றானைக் கூடி மக்களைப் பெற்றெடுத்தார்கள்; ஆனால் பாண்டவர்களின் தாய்மார்களாகிய குந்தியும், மந்திராதேவியும் தங்களின் கணவன் பாண்டு என்பான் உயிரோடிருக்கும்பொழுதே அவன் அறிய, அவன் சம்மதம் பேற்று எமன், வாயு, இந்திரன், அஸ்வநி தேவதைகள் ஆகியோரைப் புணர்ந்து தருமன், பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் போன்ற புத்திரர்களைப் பெற்றெடுத்தார்கள். இதே குந்திதான் பாண்டுவை மணப்பதற்குமுன் கன்னிப்பருவத்தாளாய் இருக்கும்பொழுது சூரியனைக் கூடி கர்ணன் என்ற மகவை ஈன்று ஒரு பேழையில் வைத்து கங்கையாற்றிலே அனுப்பிவிட்டாள். தங்களின் தந்தை பாண்டு எவ்வாறு பிறந்தாரோ அதே முறையில்தான் பாண்டவர்களும் பிறந்திருக்கிறார்கள். கள்வரிடையே இருப்பவன் நல்லவனாக இருக்கமுடியுமா? எல்லாம் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள் தானே! மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் அன்னார் உயிர்நீப்பர் மானம் வரின் என்ற உயரிய பண்பை உலகிற்கு எடுத்தோதுகிறது தமிழர்கள் வேதம், மானம் போனால் கவலையில்லை உயிர்வாழ்ந்தால் போதும் என்ற அநாகரிகக் கருத்தை அவனியோர்க்கு அறிவுறுத்துகின்றது இவ்வைந்தாம் வேதம்.

இவர்கள் தான் இவ்வாறென்றால் பாண்டவர்களுக்கு வாழ்க்கைப்பட்ட பாஞ்சாலியாவது ஒழுக்கத்தில் சிறந்த உத்தமியாக இருக்கக்கூடாதா? அவளுடைய நிலையையும் காணுங்கள். ஐவருக்கு ஒருத்தி மனைவியாக இருக்கின்ற இவ்விழி நிலை நாகரிகத்தால், அறிவால், பண்பாட்டால் முதிர்ச்சியுற்ற நல்லதொரு சமுதாயத்தாரிடையே காண முடியாதொன்றாகும். இது ஒரு புறமிருக்க, ஐந்து பேரிடம் இன்பம் காணும் திரௌபதி, அது போதாதென்று ஆறாவது ஒருவனிடமும் இன்பம் காண விழையும் அவளின் செயல் விந்தையினும் விந்தையாக நமக்குத் தோன்றுகிறது. ஒவ்வொருவரும் தங்களின் உள்ளக் கருத்தை ஒளியாமல் வெளியே சொல்லவேண்டும் என்று இவர்களை நோக்கி கண்ணன் ஒரு சமயம் கேட்க, பாண்டவர்கள் ஐவரும் தங்களின் உள்ளக் கருத்தைக் கூறியபின் திரௌபதியும் தன் கருத்தைக் கூறுகின்றாள் "பாண்டவர்களாகிய இவ்வைவரும் என் கணவர்களாக இருக்கவும், இவர்கள் நீங்கலாக ஆறாவதாக இருக்கும் ஒருவன் எனக்குரிய பெருங்காதற் கணவனாக வந்தமையும் அந்நிலையினையே என் மனம் நாளும் விரும்புகின்றது அப்பேறு இன்னும் வரவில்லையேயென நாளும் எண்ணி உருகுகின்றது" என்று பாஞ்சாலி கண்ணனிடம் கூறினாள்.

"ஐம்புலன் களும்போல் ஐவரும்
பதிகளாகவும் இன்னம்வேறொருவன்
எம்பெருங் கொழுநன் ஆவதற்கு
உருகும் இறைவனேஎனது
பேரிதயம்"

(வில்லிபுத்தூரார் பாரதம். பழம் பொருந்து சருக்கம் : செய்யுள். 21)

பாண்டவர்கள் ஐவரும் திரௌபதியின் கணவராக இருப்பினும் அவள் மனப்பூர்வமாகக் காதலிக்கும் அவளின் காதற்கணவன் கர்ணன்தான். அவன்தான் இவ்வைவருக்கும் மூத்தவன். குந்திக்கும் சூரியனுக்கும் பிறந்தவன். எனவே, இவன் காட்டிய செய்யுளில் 'வேறொருவன்' என்ற சொல்லிற்குக் கர்ணன் என்றே பொருள் கொள்ளவேண்டும். கடமையின் பொருட்டு திரௌபதி பாண்டவர்க்கு மனைவியாக வாழினும், அவள் உள்ளம் விரும்பிய காதற்தலைவன் கர்ணன்தான். அவனுடன்தான் அவள் உண்மையான காதல் வாழ்வையும் நடத்த விரும்பியிருப்பாள். ஆனால், அவளுக்குக் காலமும் சூழ்நிலையும் சதிசெய்துவிட்டன.

இவ்வாறு பாரதக்கதையை ஆழ்ந்து நோக்கினால் தொடக்கத்திலிருந்து இறுதிவரை அதில் காணப்படுவதெல்லாம் அன்பாகப் பேசி அடுத்துக் கெடுத்தலும், சொத்துக்களைக் கவர சூதாடுவதும், துடியிடை யாளைத் துகில் உரிந்து பார்த்தலும், கன்னிப்பருவத்திலே கண்டவரைப் புணர்ந்ததும், ஈன்ற குழந்தையை ஆற்றில் எறிந்ததும், ஆணங்கொருத்தியை ஐவர்மணந்ததும் போன்ற அநாகரிகச் செயல்களும், அநீதிக் கருத்துக்களும் பொருளற்ற போதனைகளும்தான்.

புராணங்கள் ஓர் ஆபாசக்குப்பை; அழுக்குச்சாக்கடை அவைகளைக் கிளறினால் துர்நாற்றம் வீசத்தான் செய்யும். அதையும் யாம் அறிவோம். அறிந்தும் ஏன் இதை செய்யவேண்டும் என்றால், மக்கள் பொய்யான புராயணங்களை மெய்யானவை என நம்பி மதியிழந்து மடமையில் அமிழும்போது அன்னாருக்கு அறிவூட்டித் தெளிவிப்பது தம்போன்ற அறிவுடையோர்களின் கடமையல்லவா? அத்தகைய நல்லெண்ணத்தில் உருவானதே இப் பாரதக் கட்டுரை. யார் சொன்னார்கள் என்பதை விட்டு என்ன சொன்னார்கள் என்பதையே அறிவாளி நோக்குவான். இந்நிலை நம்நாட்டு மக்களுக்கு என்று வருகின்றதோ அன்றுதான் நாடு நலம்பெறும். மக்களினம் மாண்புறும், அல்லவை அழியும்; நல்லவை வாழும்: இதுவே நாம் காணும் கனவு இதனை நனவாக்க நந்தமிழர்கள் முன்வருவார்களா?

## வெண்பாப் போட்டி 26

ஈற்றடி : சூழ்ச்சிகளைத் தூளாக்கும் தோள்

முடிவு தேதி 3-4-56

முகவரி:— வெண்பாப் போட்டி,
தென்றல்,
சென்னை-6



★முதன்முதலாக தமிழில் முழுநீளக் கலர்ப்படத் (அலிபாபா)தைத் தயாரித்த டைரக்டர் டி. ஆர். சுந்தரம் அவர்களை சென்னையில் நடைபெற்ற பாராட்டுக்கூட்டத்தில் ஆசிரியர் கண்ணதாசன் பாராட்டிப் பேசுகிறார்.



★பெல் பிக்சர்சார் அளித்த வெள்ளி மணியை, செட்டிநாட்டரசர் முத்தையா அவர்கள் டி. ஆர். சுந்தரத்திடம் தருகிறார்.

போட்டோ : தென்றல் திரை, சாமுவேல்.



# வெண்பாப் போட்டி

## 24. தேடிக் கொடுப்பார் திறம்

வெண்பாப் போட்டி 24-ன் பரிசுபெற்ற வெண்பாவையும், ஏனைய தகுதியுடைய வெண்பாக்கள் சிலவற்றையும் சென்ற இதழில் வெளியிட்டோம். இந்த இதழில் மேலும் சில தகுதியுடைய வெண்பாக்களை வெளியிட்டுள்ளோம்.

கன்னல் தமிழும் கருதும் உயிர்போன்ற
செந்நெல் உமிழும் திருவிடமும்-இக்காளில்
வாடிக் குலைந்த வறுமையினைப் போக்குவதே
தேடிக் கொடுப்பார் திறம்.

—ந. சின்னையன், அண்ணாமலைநகர்.

★

கன்னித் தமிழணங்கே காசினியில் உன்பெருமை
மின்னித் திகழ்ந்து மிளிர்ந்தோங்க-என்னண்ணா
ஓடித் தினந்தோறும் உன்றன் புகழ்பரப்பித்
தேடிக் கொடுப்பார் திறம்.

—சோ. கண்ணப்பன், பேரூர்.

★

வாட்டும் பசிக்கும் வறுமைக்கும் ஆளாகி
வீட்டில் மனைமக்கள் வாடிடினும்-பாட்டாளி
ஓடியுழைத் துத்தன் னுதிரத்தால் நாட்டிற்குத்
தேடிக் கொடுப்பார் திறம்

—முருகு. வரகூர்.

★

இன்னல்தான் சேர்ந்திடினும் ஈட்டி எதிர்த்திடினும்
கன்னல் மொழிபேசிக் காசினிக்கு-தன்னலம்
ஓடடவே நன்குழைத்தல் உண்மையாய் நல்வாழ்வு
தேடிக் கொடுப்பார் திறம்.

—வ ஆனையப்பன், பரிவில்லிக்கோட்டை.

★

செந்தமிழா இன்பத் திராவிடனே கூட்டணியில்
சந்தேகம் கொண்டு தயங்காதே-நந்தமிழர்
நாடு செழித்திடவே நாட்டங்கொண் டேயுழைத்துத்
தேடிக் கொடுப்பார் திறம்?

—பெ. இராமையா, சாலிச்சந்தை.

★

சிந்தைவரின் செந்தமிழ்க்கு நெஞ்சங் கொதித்தெழுந்து
சிந்தை களிக்கச் செயலாற்றி-பைந்தமிழை
நாடி வளர்ப்பதுவே நற்றாயகஞ் சிறக்கத்
தேடிக் கொடுப்பார் திறம்.

—குகன்குருசாமி, கமுதி.

★

இல்லார்க் குதவுவது ஏற்பாருக் கீவது
கல்லார் இடத்தன்பு காட்டுவது-பல்விதத்தும்
நாடி வருவார்க்கு நல்லவழி சொல்லுவது
தேடிக் கொடுப்பார் திறம்.

—அ. ச. பாவநாசம், சாத்தூர்.

★

தன்னலம் அற்றவர்; தண்ணளி பூத்தவர்;
பன்னலம் பேணுயர் பண்பினர்;-மண்ணுலகிற்
கூடி யுவக்குங் குணமுடையார் பாலுண்டு
தேடிக் கொடுப்பார் திறம்.

—எஸ். வாசுதேவனார், காரைக்கால்.

★

கோடி பலபெற்றுக் கொற்றமுடன் வாழ்வாரை
நாடி யளித்தல் நலமன்றே-என்றும்
வாடி வருந்தும் வறியோர்க்கொன் றீவதுவே
தேடிக் கொடுப்பார் திறம்.

—ந. தங்கராசு, குடந்தை.

வானில் பறப்பதுவும் வையத்தில் மின்சாரம்
ஆன புதுமைகள் அத்தனையும் ஈனுவதும்
கோடான கோடிமதக் கூற்றல்ல விஞ்ஞானம்
தேடிக் கொடுப்பார் திறம்

—தொல்காப்பியன், அகரப்பேட்டை.

★

இல்லை எனுங்குறையோ(டு) இக்காட்டில் சாதிமதம்
எல்லையிலாத் துயரை ஈனுவதால்-தொல்லுலகில்
கூடி யதையொழிக்குங் கொள்கை தருவதுதான்
தேடிக் கொடுப்பார் திறம்.

—வி. ப. கோவிந்தசாமி, சென்னை-12.

★

கண்ணின் கருமணியே காய்த்திட்ட நம்காதல்
வண்ணக் கனியாகும் வாடாதே-தண்ணிலவில்
ஆடிக் களித்திடலாம் அன்புடைய பெற்றோர்கள்
தேடிக் கொடுப்பார் திறம்.

—இ. ப. நடராசன், இடையர்பாளையம்.

★

சீர் இளமை பாராட்ட செக்காப் புலவர்கள்,
பார் ஆண்ட பைந்தமிழ்காப் பாரெனில்-ஆர்வமுடன்
ஓடி அணைத்திடுவர்; ஓயாமல் ஒண்டமிழர்
தேடிக் கொடுப்பார் திறம்.

—செ. கா. அருணாசலம், செட்டிபாளையம்.

★

திக்கெட்டும் சீரமுடன் தீந்தமிழர் பண்பாட்டை
இக்கால் எடுத்தியம்பும் எம்தலைவன்-எக்காலும்
கூடிக் கொடுப்பாரே தன்னுயிரை; தென்னவர்க்கே
தேடிக் கொடுப்பார் திறம்.

—வி. மாரியப்பன், பாண்டமங்கலம்.

★

கொள்கைமணம் தூய்காதல் கோடா ஒழுக்கமதும்
கன்னொத்த செந்தமிழின் காவியந்தான்-உள்ளமதை
ஊட்டி வளர்க்குமால் ஒண்டமிழர் அக்கலையைத்
தேடிக் கொடுப்பார் திறம்.

—தமிழ்த்தேவன், வேலூர்.

★

சிந்தித்தல் பேசல் செயலாற்றல் மூடமதி
நிந்தித்தல் சொந்தமொழி நேசித்தல்-முந்துநிலை
நாடி நடித்தலொடு நன்கெழுதல் நாட்டுநலம்
தேடிக் கொடுப்பார் திறம்.

—பாவநாசம்-பொன்னிவளவன், பள்ளியக்ரகாரம்.

★

நாட்டின் உடைமைதனை நாடாதே விட்டதன்றி
மீட்கவே போராடும் மேலோரைத்-தாக்குகின்ற
ஈடில் அமைச்சர்காள்; இஃதோஓர் நாட்டினலம்
தேடிக் கொடுப்பார் திறம்.

—கு. ச. ராஜாராமன், சிதம்பரம்.

★

சங்கத் தமிழ்மொழியைப் பங்கப் படுத்தினரா?
செங்குருதி சிந்துவதா சோரஆவி-மங்குவதா
நாடி துடித்திடவே நற்றமிழர் வெற்றிபெறத்
தேடிக் கொடுப்பார் திறம்.

—செ கா. செங்கதிரோன், செட்டிப்பாளையம்.

★

ஊருக்கோர் பள்ளி யுழுபவனுக் கோர்காணி
பாரியைப்போல் பாவலர்க்குப் பல்பொருளும்-சேர்மையே
கூடிக் குணங் கொல்வார் கொள்கையற நல்லமைச்சுத்
தேடிக் கொடுப்பார் திறம்.

—வள்ளுவனடிப்பொடி, வேம்பன்பட்டி.

★

நாடிக் கொடுவந்த நன்மைதருந் தீங்கனியைப்
பாடிப் புகழ்தந்த பாட்டிக்குப்-பைந்தமிழன்
ஓடிக் கொடுத்தவகை ஊரறியும் உண்மையிது
தேடிக் கொடுப்பார் திறம்.

—எஸ். ஜே. தர்மராஜன், பழமலை.

★

நாடுய்யச் செய்யுமால் நற்புகழை நாட்டுமால்
ஈடிற் பெரும்பொருளை ஈட்டுமால்-கேடறுசீர்
நாடிழந்த நல்லதமிழ்க் காப்பியத்தை எஞ்ஞான்றும்
தேடிக் கொடுப்பார் திறம்.

—ப. காளியப்பன், கோட்டைச்சேரி.



# கேள்விப்பெட்டி

பன்மொழிப் புலவர், கா. அப்பாதுரை, எம். ஏ. எல். டி.

## பதில் தருகிறார்

**இரா. போன்முடி. பூண்டுலோயா**

1. 'நிலா எரிக்கும் இரவு' என்பது இலக்கணப்படி சரியா? பிழையா?

நிலா எறிக்கும் இரவு என்பதே சரியான வடிவம், எறிக்கும என்பது ஒளிவிடுகிற என்ற பொருளுடையது. இந்த எழுத்து மாறுபாடு தவிர தொடரில் வேறு இலக்கணப் பிழை இருப்பதாகத் தெரியவில்லை.

**சு கண்ணன், தோவாளை**

1. "ஸ" என்பதை 'லை' என்றும் "ணை" என்பதை "ணை" என்றும் எழுதுவது சரியா?

2. 'நான்' என்பதை 'ஞான்' என்று ஏன் வழங்குவதில்லை?

1. "ஸ" "ணை" போன்ற எழுத்துக்களின் வடிவங்கள் ஏட்டில் எழுதும் காலத்தில் குழப்பமும், மயக்கமும் இல்லாமலிருப்பதற்காக எழுந்தவை. இவற்றை இப்பொழுது சீர்திருத்துவது சரியே. ஆனால் இன்று செய்யப்படும் சீர்திருத்தங்கள் பல, அரைகுறைச் சீர்திருத்தங்கள். அத்துடன் எல்லா அரைகுறைகளையும் போலவே, அவை திட்டமிட்ட சீர்திருத்தமல்ல. எனவே, அடுத்தபடி சீர்திருத்தத்திற்கு அவை சில சமயம் குந்தகமாகத் தக்கவை திட்டமிட்டு எழுத்துக்கள் அனைத்தையும் 18 மெய்கள் 12 உயிர்கள் சார்பெழுத்துக்கள் 3 என 33 எழுத்துக்களாக அமைப்பதே எழுத்துச் சீர்திருத்தத்தின் இறுதி இலக்காகயிருந்தால் நலம்.

அரைகுறை சீர்திருத்தத்தின் இடர்பாடுகளுக்கு ஒரு எடுத்துக்காட்டு தருகிறோம். "ஆ" "ஈ" முதலியவற்றிற்கு சிலர் கால்வாங்கி எழுத விரும்புகின்றனர். இதை அப்படியே நிறைவேற்றினால் இன்றைய "கோ" என்ற எழுத்து "கே" ஆகிவிடும். "கோ" என்ற எழுத்துக்கு வடிவம் நாலு உறுப்புக்கள் கோண்ட அருவருப்பான வடிவம் (கொ.ா) ஆகிவிடும்.

"ஸ" "ணை" சீர்திருத்தம் கொண்டு வந்தவர்கள் சீர்திருத்த திட்டமிடவில்லை என்பதுமட்டுமல்ல முன்னுக்குப் பின் முரணான சீர்திருத்தங்களும் கொண்டு வருகின்றனர். எப்படியெனில் "ஐ" என்பதை அவர்கள் "அய்" என்று எழுதுகின்றனர். இதன்படி உண்மையில் "ஸ" "ணை" என்பவற்றை லய், ணய் என்றல்லவா எழுத வேண்டும்.

இச்சீர்திருத்த சார்பான சில மொழி ஆராய்ச்சியாளர் தமிழில் ஐ, ஒள, என்ற எழுத்துக்களே இடையாதென்றும், சமஸ்கிருதத்தைப் பார்த்து அவை ஆக்கிக் கொள்ளப்பட்டவை என்றும், ஆராயாது நிலை நாட்ட முற்படுகின்றனர். இவர்கள் சொல் முதலில் வரும் "ஐ" காரத்தைத் தான் இவ்வாறு கருதி "அய்" "கைய்" என்று எழுதுகின்றனர். 'விடுதலை" என்ற பத்திரிகை பெயரைக்கூட "விடுதலய்" என்று எழுதுவதில்லை. தமிழில் ஐகாரத்தில் முடியும் சொற்கள் எண்ணற்றவை. அதுவே தொழில் பெயர் விகுதியுமாகும். தமிழில் "ஐ" கிடையாது என்பவர் இதனை எண்ணிப் பார்க்கவில்லை.

சம்ஸ்கிருதத்தில் தமிழைப் பின்பற்றி "ஐ" "ஒள" சேர்த்துக்கொள்ளப்பட்டதேயல்லாமல், இந்த ஒலிகள் வடநாட்டு சமஸ்கிருதத்திலோ, வடநாட்டுத் தாய்மொழிகளிலோ, அன்றும், இன்றும் கிடையாது

2 "நான்" என்பதின் பண்டை வடிவத்தில் தொடக்க "ன" கரம் இருந்ததில்லை. முன் அன்ன ஆகாரம் மட்டுமேயிருந்தது. இதைத் தமிழர் ஆன் "என்றோ, என்" என்றோ தான் எழுதவேண்டும். வினை விகுதியில் "ஏன்" என்றே எழுதினர், ஆனால் பெயராக வரும்போது "ஏன்" என்று எழுதுவதும் தவறு என்று கருதினர். "ஆன்" என்று எழுதுவதும் தவறு என்று கருதினர், ஆகவேதான், முன் அன்ன ஒலி சுட்டி யகரம் சேர்த்து "யான்" என்று எழுதினர். இதுபோலவே "நண்டு" "நாண்" என்ற சொற்களையும்; "ந" கரத்துடன் "யக"ரம் சேர்ந்த ஒலியாகிய "நக"ரம் இட்டு எழுதினர், 'நான்' என்பதை தமிழர் இவ்வாறு "ஞான்" என்று எழுதாவிட்டாலும், அங்ஙனம்பழந் தமிழர் சிலர் எழுதியிருக்க வேண்டும். அல்லது உச்சரித்திருக்கவேண்டும்; அதுவே மலையாளத்தில் "ஞான்" என்று ஆகியிருக்கிறது

"நான்" என்பதிலுள்ள "ன"கரம் முதல் உயிரெழுத்தை மூக்கு வழியாக சிலர் உச்சரித்ததனால் ஏற்பட்டதே. தொடக்கக் கால உயிர் எழுத்து முன் அன்னமாயிருந்ததாலும்; அடுத்து மெல்லெழுத்து வந்ததனாலும் நகரம் தோற்றியிருக்கக் கூடும் என்று மொழி நூலார் கருதுகின்றனர்.

இன்றைய தமிழ் எழுத்திலில்லாத பண்டைத் திராவிட ஒலிகளில் மூக்கு வழி உயிர் தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலும் (ட்); க்' 'ச்' 'இடைப்பட்ட ஒலி தெலுங்கிலும்' குற்றியலுகரம் துளு மொழியிலும் உள்ளன.





ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை - 6.

